சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 12] பிலவ-ஹு கார்த்திகை-மீ 1ம்-உ (16-11-61) [இதழ் 11

## ஆசிரியர் குழு

1. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை, காசி.

3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.

4. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.

5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20. நுங்கம்பாக்கம் ஹைரோடு. சென்னை - 6.

6. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

---

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | சிதம்பரச் செய்யுட் கோவை (கட்டுரை 51) .... | 599 |
| 2. | கம்பராமாயணத்தில் பாட வேறுபாடுகள் ... | 603 |
| 3. | மதுரைக்கலம்பகம் - உரைநடை .... | 611 |
| 4. | ஸ்ரீ சொக்கநாதர் சுவாமி திருவருட்பா .... | 617 |
| 5. | Hymns of the Tamil Saivite Saints .... | 620 |
| 6. | மறந்தான் - மறந்திலாதான் .... | 621 |
| 7. | தொல்காப்பியம் .... | 631 |
| 8. | ஸ்ரீ அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை (மூன்றும் பகுதி) .... | 637 |
| 9. | திருமந்திரம் தரும் தெள்ளமுதம் .... | 639 |

உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 || பிலவ-ஆு கார்த்திகைத் திங்கள் 1-ம்வ [16-11-61] || இதழ் 11

# சிதம்பரச் செய்யுட் கோவை

## மாணிக்கவாசக அடிகள்



[ கட்டுரை 51 ]

தில்லையில் நிகழும் திருவிழாக்களைப் போல்வது வேறு எல்லையில் என்றும் நிகழாது. சிதம்பரத்தைச் சூழ்ந்த நாற் பெருந் தெருவிலும் உடையானும் உடையாளும் எழுந்தருளுங் காட்சியைப் பெறத், தவம் செய்திருத்தல் வேண்டும். அத் தவமும் பல பிறவிகளிற் செய்த தவமாதல் வேண்டும். அம் மட்டோ? 'சிவத்தைப் பேணல் தவத்திற்கு அழகு' என்ற முது மொழிக்கு இணங்க, வேறு எப்பொருளையும் குறித்த தவமாக இராமல், சிவமெனும் செம்பொருளையே குறித்த தவம்தான் சிதம்பர தரிசனம் பெறுவிக்கும், வேறு எத்தவத்தாலும் அது பெறலரிதே. அதனுல்தான் சிதம்பர தரிசனம் மோட்ச சாதனம் ஆயிற்று. சிதம்பர மும்மணிக் கோவையுள் (பா. 2)

'சிற்றுயிர்க்கு இரங்கும் பெரும்பற்றப் புலியூர்
உற்றநின் திருக்கூத்து ஒருகால் நோக்கிப்
பரகதி பெறுவான் திருமுன்பு எய்தப்
பெற்றனன் அளியனேன் பற்றிலன் ஆயினும்
அன்பிலே கொடியையென்று அருளாய் அல்லே .
நின்பதம் வழங்குதி நிமல என்றனக்கே'

என்ற இடத்தில் இவ்வுண்மை விளக்கப்பட்டுளது.

அச் சிதம்பரதரிசனம் கிடைக்கப் பெறும் தவத்தோர்க்கு எய்தும் புண்ணியத் திருநாள் பலவற்றுள் ஒருநாள் நிகழ்ச்சி அவரவர் அநுபவத்தில் வெவ்வேறுயிருக்கும். அதற்கு எல்லே இல்லே. ஒரு பேதையின் நிகழ்ச்சியை அப்பேதையை வளர்த்த கோதை (செவிலி) சொல்லியது இந்நிகழ்ச்சி. இது குமரகுருபரர் திருவுள்ளத்தில் நிகழ்ந்து வெளிப்பட்டது. திருவீதி யுலாக் காட்சியில் நிகழ்ந்து அதைக்கண்டு பாடியதாகக் கொள்ளலும் பொருந்துவதே.

நடராசப் பெருமானுர் திருத்தேர் ஏறித் திருவீதியுலா வருகின்ருர். அவ்வுலாவில் உடன் வருவார் எவர்? உலகைப் படைக்கும் பெருமானும் அதனே வயிறு புடைக்க உண்ணும் திருமாலும் விண்ணுளும் மகவானும் புடைநெருங்கி வருகின்ற னர். மகளிர் திருப்பல்லாண்டு இசைத்துப் போதருகின்றனர். தந்தை மட்டும் இந்நிலையில் ஏகுதல் உலகியலுக்கு ஒல்லுமோ? மைந்தரும் அச்சிறப்பிற்கு உரியவராய்த் திருவீதி யுலாவில் எழுந்தருளினர். அவர் எவர்? முதுகோ ஆகிய ஒரு கோட்டிரு செவி மும்மதநால் வாயைங்கைக் களிறும் இளங்கோ ஆகிய பன்னிருகைப் பெருமானும் ஆவர். 'இளங்கோ (அடிகள்)' என்ற சேரனுர்க்கும் முருகன் திருப்பெயரைக் கருதி வைக்கப் பெற்றதே. குறிஞ்சி யாட்சி யுடையார்க்குக் குறிஞ்சி நிலக் கடவுள் திருப்பெயரை வைத்தல் வியப்போ? 'பிறவா யாக்கைப் பெரியோன்' என முதலிற் சிவபரஞ் சுடரை வைத்து, அடுத்து அறுமுகச் செவ்வேளே எடுத்து உரைத்ததும் குன்றக் குரவையுள் ஆடுவோர் பாடுவோர்களின் கூற்றுக 'எங்கடவுள்' என்றதும், 'நிலேயுயர் கடவுள்' 'ஆலமர் செல்வன் புதல்வன்' என்றதும்,

'இளங்கோ' என்றது இயற்பெயராதலும் உணராதார், அவரைச் சைனர் என்றனர். இளவரசு அடிகள் என்ற பொருளை அவர் பெயர் தாராது. தருவது குற்றமும் ஆம்.

'இறைவனை முற்கூறுது மாயோனை முற்கூறியது என்னையோ எனின், மாயோன் காவற் கடவுளாய் அருளை அருத்தலான் என்க' என்று எழுதிய அடியார்க்கு நல்லார் வரலாற்றில், 'இவருடைய வருணம், சமயம், காலம் ஆகிய இவற்றுள் ஒன்றும் புலப்படவில்லை' என்னும் தொடர் இருக்கின்றது.

'நுதல்விழி நாட்டத்து இறையோன்' என்பதன் உரையில் அரிய கருத்தை அறிவித்த சைவாசாரியர் அடியார்க்கு நல்லார் என்பதை அனைவரும் அறிவாராக. அஃதாவது :—

"இறைவி கண்புதைத்த பொழுது (புதியதொரு கண்ணாக) நெற்றியிற் புறப்படவிட்ட கண்ணையுடைய இறைவன்" என்பது 'நுதல்விழி நாட்டத் திறைவன்' என்பதன் பொருள். 'நுதலில் இமையாநாட்டம் என்றும் ஆம்' என மற்றொருபொருளும் உரைத்தார். அதுவும் சாலச்சிறந்ததே. 'விழிநாட்டம்' என்றதால் 'இமையா நாட்டம்' எனல் எளிதோ? வினைத்தொகையாகக் கொண்டு, 'காமனை விழித்த நாட்டம் எனவும் ஆம்' என்றும் உரைத்தார். காமனை அங்குக் கொணர்தல் நிட்காமனை.

'ஆடக மாடத் தறிதுயில் அமர்ந்தோன்
சேடம் கொண்டு சிலர் நின்று ஏத்த,'

அதை வாங்கிய செங்குட்டுவன்,

'தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்,
ஆங்கு அது(மால்சேடம்) வாங்கி அணிமணிப் புயத்துத்
தாங்கினன்,'

இது சிலம்பொலித்த ஒலியே ஆகும்.

திருவுடை மன்னர் திருமாலுக்கு நிகராவர். தன் பிரசாதத்தைத் தன் தோளில் தாங்குவதே கடனாகும். தலைமேற்

கொள்வது தன்னினும் உயர்ந்தாரது விசேட வத்துவையே. தனது வத்துவைத் தன்னினும் இழிந்தாரே விசேடமாக்கொள்ளற் பாலர். செங்குட்டுவன், 'செஞ்சடைவானவன் அருளினில் விளங்க வஞ்சித் தோன்றிய வானவன்'. இதற்கு இமய முனிவர்கள் சான்ருவார்கள். அவனுக்குப் பின் வந்தவர் இளங்கோ அடிகள். அரசு வேண்டா என்றவர் இளங்கோ (இளவரசர்) ஆவாரா? 'இளங்கோ' முருகவேளைக் குறித்ததே. முதுகோ-மூத்த பிள்ளையார், இளைய பிள்ளையார்-முருகனுர். தம்முனுரைப் போலத் தம்பிருரும் சைவரே ஆவார். பிற சமயத்தார் அல்லர். பிதற்றுரைகளை நம்பி உண்மையை இழத்தல் எவ்வாராய்ச்சிக்கும் தகாது. அவற்றினும் சிறந்த பழைய வரலாறு முதலிய வற்றை ஆராயும் ஆராய்ச்சிக்கு அது தகாது. 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்ற ஒன்றே போதும் அவர் சைவர் எனற்கு.

இதனை இங்கு எழுத வாய்ப்பு உண்டாக்கியது, 'இளங்கோ' என்பது. அதை இப் பாடலில் இலங்கவைத்தருளிய ஆசிரியர் குமரகுருபரர்க்கு அடியேனது திரிகரணமும் ஒன்றிய வணக்கம் உரியதாகும். இக்கட்டுரைகளை எழுதிவரப் பணித்தருளியும் அடியேனைப் பல யாண்டுகளாக அநுக்கிரகம் செய்து ஆதரித்தும் வரும் சிலத்திரு. காசிவாசி அருணந்தி மாமுனிவர் திருவடிகளையும் இப்பொழுது போற்றி இன்புறுகின்றேன்.

நடராசப் பிரானுர் திருத்தேர் ஏறிவரும் திருவிழா நிகழ்ச்சியுள் ஒரு நிகழ்ச்சியே, சைவசித்தாந்த சாத்திரங்களுள் ஒன்ருகத் திகழும் சங்கற்ப நிராகரணம் என்னும் பெறலரிய ஞானப் பனுவற்பொருள். அதை உட்கொண்டு நோக்குவார்க்கு இப் பாடலின் அமைப்பு, தன் வழிமுதற் பாடற்போக்கு ஆதல் இனிது புலப்படும். சிலர் கூற்றுக்கள் இதற்கு பலவும் அதிற் சிலவுமாகி உள்ளன.

இப்பாடல் பெரியது. ஒரே கட்டுரையில் முற்றும் எழுதுவது பத்திரிகைக்கு ஒவ்வாது ஆதலின் அடுத்துப் பிறபகுதி விளக்கி எழுதப்படும். முடிவில் முழுப்பாடலும் எழுதப்படும்.

———

(தொடரும்)

# *கம்ப ராமாயணத்தில் பாட வேறுபாடுகள்



பேராசிரியர்,

**திரு. கோ. சுப்பிரமணியம் அவர்கள் எம். ஏ., பி. எல்.,**

---

இராமன் வரலாற்றைக் கம்பன் காவியமாகப் பாடினுன். அக்காவியத்தை நாம் கம்பராமாயணம் என்று வழங்குகிறேம். ஆனுல் கம்பன் தனது நூலுக்கு என்ன பெயர் கொடுத்தான் என்பது பற்றித் திட்டமாய் ஒன்றும் சொல்வதற்கில்லை. இராம கதை, இராம காதை, மாக்கதை, இராமாவதாரம் என்று பல வாருகச் சொல்லுவர். ஆராய்ந்து பார்க்கில், இராமாவதாரம் என்பதே வலியுறும். எனவே, இந்நூலின் பெயர் குறித்தே எத்தனேயோ வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. இவ்வாறே காண் டங்களின் பெயர் பற்றியும், படலங்களின் பெயர்பற்றியும் எண்ணிக்கை பற்றியும் எத்தனேயோ வேறுபாடுகள் உள்ளன. பாடல்களே எடுத்துக்கொண்டால், பல பாடல்கள், இவை கம்பன் பாடியவையா அல்லது இடைச் செருகலா என்ற ஐயத்தை எழுப்பி நிற்கும். இவற்றையும் தாண்டிச் சென்றுல், ஒவ்வொரு பாட்டிலும், ஒவ்வொரு வரியிலும், ஒவ்வொரு சீரிலும் பலவான வேறுபாடுகள் காணப்படுகின்றன். சில பாடல்களில் பாட்டு முழுதுமே உருமாறிக் கிடக்கும். முதலெழுத்துத் தவிர மற்றைய வெல்லாம் வேறுபட்டுக் காணப்படும் பாடல்களும் சில ஏட்டுச் சுவடிகளில் நான் பார்த்து வியப்படைந்திருக்கிறேன். ஒரு போலிப் புலவர் கம்பன் பாடற் கருத்துக்களே வைத்துக்கொண்டு, தாமாகவே எல்லாப் பாடல்களேயும் தெளிவாக, எளிதாகப் பாடி முடித்துவிட்டார் என்று தெரிய வந்தது. அவ்வேட்டில் இரா மாயணக் கதை இருக்கும்; ஆனுல் கம்பன் கவிச் சுவை இருக் காது. அதைக் கம்பராமாயணம் என்று சொல்ல முடியாது. வம்பராமாயணம் என்றுதான் சொல்லவேண்டும். இதுபோன்ற ஏடுகளேயும் போலிப் பாடங்களேயும் கண்டு மக்கள் ஏமாந்துவிட லாகாது. தமிழ் மொழியில் வேறு எந்த நூலிலும், இராமாவதார

---

* திருச்சி வானெலியின் இசைவு பெற்றது.

நூலைப்போல், பாடவேறுபாடுகள் காணப்படவில்லை. இவ்வாறு வேறுபாடுகள் தோன்றக் காரணம் என்ன?

கம்பன் காவியம் பாடியநாள் முதலே அந்நூலை யாவரும் விரும்பிக் கற்கத் தொடங்கினர். அந்நூல் சுரக்கும் இராமனது பரக்குந் தொல்புகழமுதினை யாவரும் பருகுவாராயினர். கம்பனின் செஞ்சொற் கவியின்பம் யாவர் உள்ளத்தையும் கவர்ந்தது. சமயத் துறையிலுள்ளோரும் இராமாயணத்தை விரும்பிக் கற்றனர்; இலக்கியச் சுவையில் ஈடுபட்டோரும் அந்நூலை விரும்பிக் கற்றனர். சாதி சமய இன வேறுபாடின்றித் தமிழர் அனைவரும், முதியரும் இளையரும், பண்டிதரும் பாமரரும் படித்தனர். தாமாகவும் படித்தனர், கற்றுச் சொல்லவும் கேட்டனர். சைவரும் கற்றனர், வைணவரும் கற்றனர், பிறசமயத்தோரும் கற்றனர். ஊர் தோறும் இராக் காலங்களில் பௌராணிகர்களைக் கொண்டு கம்பராமாயணத்தைப் பாடிப் பொருள் நயங்களை விளக்கச் செய்தனர். இது நாவலர், பாவலர்களுக்கு நல்ல பொருள் வருவாயையும் அளித்தது. அதனுல் தமிழ் நாட்டில் பல புலவர்கள் சுவடி பாராமல் ஒப்பிக்கும் அளவுக்குக் கம்பன் நூலை மனப் பாடம் செய்து வைத்திருந்தனர். குமரகுருபரர் போன்ருேர் வடநாட்டுக்கும் சென்று கம்பராமாயணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி மக்களைக் களிப்பூட்டியதாகச் சொல்லப்படுகிறது. இவ்வாறு கம்பராமாயணம் முழுதையும் மனப்பாடம் செய்துவைத்துக் கொண்டு ஊர்தோறும் சென்று பிறருக்கு எடுத்து உரைத்துப் பொருளும் புகழும் ஈட்டி வந்த பௌராணிகர்கள் கற்றுச் சிறந்த புலமைமிக்கோராயும் இருந்தார்கள். அவர்கள் பல பாடல்களைக் கம்ப சூத்திரங்கள் என்று தங்கள் அறிவுத் திறமைகொண்டு விளக்கம் காட்டி வியப்பூட்டி மக்களை மகிழச் செய்தனர். அவ்வாறு செய்யும் பொழுது இடையிடையே தங்கள் சொந்தச் சரக்குகளையும் கம்பன் காவியத்தில் கலப்பாராயினர். இவ்வாறு புலவர்களுக்குள் ஒருவரையொருவர் மிஞ்சக் கருதி ஏற்பட்ட போட்டியால் மூலபாடம் உருமாறிக்கொண்டே வரலாயிற்று.

இப்புலவர்கள், நினைவிலிருந்து சொல்லி வந்த மூல பாடத்தை அவர்களைச் சூழ்ந்திருந்த கற்றுச் சொல்லிகள் ஏட்டுச் சுவடி

களில் எழுதி எழுதிப் படிகள் எடுத்து வந்தனர். அவற்றில் மறதியாலும், அறியாமையாலும், அகந்தையாலும் பல தவறு கள் ஏற்படலாயின. பாட வேறுபாடுகள் பல்கின. தம்மால் ஏற் படும் பிழையை ஒத்துக்கொள்ள மனமில்லாதோர், அப்பிழைக்கு ஏற்ப மற்றும் சில நல்ல உண்மைப் பாடங்களை வேண்டுமென்றே திருத்தி எதிரிகளை ஏமாற்றித் தமது அறிவினாற்றலை நிலை நாட்டத் தலைப்பட்டனர். படித்தவன் பாட்டைக் கெடுத்தான்; எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான் என்ற நிலை ஏற்பட்டது.

அச்சுயந்திரம் வருமுன் நூல்கள் ஓலைச்சுவடியில் எழுத் தாணி கொண்டு எழுதப்பட்டன. அப்படி எழுதும்போது ஒற் றெழுத்துக்களுக்குத் தலையில் புள்ளியிடுவதும், எகர ஏகார, ஒகர ஓகார உயிர்களுக்கும் உயிர்மெய்களுக்கும் வேற்றுமை தெரியும் படி வரிவடிவு அமைப்பதும், கா, சா-முதலிய உயிர் மெய்களில் நெடில் என்று காட்டும் குறியீடாகிய (ா) காலுக்கும் இடையின ரகரத்துக்கும் வேறுபாடு தோன்றும்படி எழுதுவதும் இல்லை. மற்றும், பக்கம் என்பது பககம எனவும், கோல் என்பது கொல எனவும், தரம் என்பது தாம எனவும் எழுதப்பட்டிருக்கும்.

பெரும்பாலும் ஒத்த ஒலியுடைய ல, ழ, ள என்ற எழுத்துக் களும், ந, ன என்பனவும், ர, ற, என்பனவும் ஒன்றிருக்க வேண் டிய இடத்தே மற்றொன்று இருக்குமாறும் எழுதப்பட்டிருக்கும். அன்றியும், பெரும்பாலும் ஒத்தவடிவுடைய எழுத்துக்களாகிய க, ச, த என்னும் எழுத்துக்களை முன்னேயுடைய சொற்கள், கலம் சலம் என்றும் தலம் என்றும் படிக்கப்பட்டும், கரம் - சரம் என்றும் தரம் என்றும் படிக்கப்பட்டும், தலை - கலை என்று படிக் கப்பட்டும் பிழைபட எழுதப்படுவதுண்டு. பழம் - பளம் எனவும், வாழை - வாளை எனவும், சிறப்பும் பொதுவுமாகிய வேற்றுமை தெரியாதாராலும், வேற்றுமை தெரியாதார் படிக்கக் கேட்டவ ராலும் எழுதப்பட்டுப் பிழைபடுவதும் உண்டு. போற்றினான் - போத்தினான் எனவும், சாற்றினான் - சாத்தினான் எனவும், ஏற்றி னான் - ஏத்தினான் எனவும் தம்முள் மாற்றி எழுதப்பட்டிருக்கும். நன்கு கற்றவர்களே யன்றிச் சிறிது பயின்ற அளவில் நன்கு எழுதப் பழகிக் கொண்டவர்களும் நூல்களைக் கூலிக்கு எழுது வாராயினர். சிறிது பயின்றவர்கள் எழுதும் பொழுது தாமே

மூல நூற்சுவடிகளைப் பார்த்து எழுதுவதும், பிறர் படிக்கக் கேட்டு எழுதுவதும் உண்டு. இவ்வாறு பிழைகள் ஓலைச் சுவடி களிற் புக இடம் உண்டு. இனிப்பாட மாற்றம் வந்தவாறு கவனிப்போம்.

ஒற்றெழுத்துக்களுக்குத் தலையிற் புள்ளி வைப்பதில்லை என்றோம் அல்லவா? கா கோ முதலிய நெட்டெழுத்தின் குறி யீடாகிய (ா) காலுக்கும் ரகரத்துக்கும் வேற்றுமை தோன்ற எழுதுவதில்லை. அந்த முறையில் ஒருபாட வேறுபாடு வருமாறு; பேர்வான் என்பது ஏட்டில் போவான என்று எழுதப்பட்டிருக்கும். இதனை, போவான் எனவும் பேர்வரன் எனவும் பேர்வான் எனவும் படிக்கலாம். ஆயினும் இடத்திற்கு ஏற்றவாறு பொருள் அமை யும்படி படிக்க வேண்டும். எடுத்துக் காட்டாகக் கம்பனிலிருந்து ஒன்று காட்டுவோம். யுத்தகாண்டம், இரணியன் வதைப்படலம் 129-ஆம் செய்யுளில், "பேரடா நின்ற தாளோடு உலகெலாம் பெயரப் போவான்" என்று அச்சுப்புத்தகங்களில் உள்ளது. இவ்வடியின் ஈற்றிலுள்ள போவான் என்பது, ஒருவாறு பொரு ளியைபு உடையது போற் காணப்படினும், அச்சொல்லை, பேர்வான் என்றும் ஏட்டெழுத்து முறையிற் படிக்கலாமன்றோ? அவ்வாறு கொண்டு, "பேரடா நின்ற தாளோடு உலகெலாம் பெயரப் பேர் வான்" என்று படிக்குங்கால், மோனைநயமும் பொருட் சிறப்பும் எத்துணை மிகுகின்றன என்பது சொல்லவேண்டுவதன்று. மேலும் பேர் என்ற மூலம் ஒன்றையே கொண்டு, பெயரப் பேர்வான் என எச்சமும் முற்றும் தோன்ற அமைத்த நயமும் நோக்குங்கால், போவான் என்பது பேர்வான் என்றே படிக்கப்படவேண்டும் என்பது புலப்படும்.

இனி, போவான் - போனான், செல்வான் - சென்றான், சொல் வான் - சொன்னான் என்பன போல்வன, சீர்முறையில் ஒத்த அளவுடையன. ஆதலின், நினைவு கொண்டு எழுதுங்கால், போவான் - போனான் எனவும், செல்வான்- சென்றான் எனவும், சொல்வான் - சொன்னான் எனவும் மாறி வருதலும் உண்டு. இது போன்று ஒத்த ஓசையுடைய சொற்களாலும், ஒத்த ஓசை யுடைய வேற்றுமை யுருபுகளாலும், அரச, நிருப போன்ற ஒத்த ஓசையுடைய பரியாயச் சொற்களாலும், பொருள் தெரியாமை

யால் பொருள்தெரியும்படி நேடும் - தேடும் என்பன போன்று மாற்றியமைப்பதாலும், மலை, கிரி, வரை போன்ற ஒத்த சீருடைய பரியாயச் சொற்களாலும் பாட பேதங்கள் ஏற்படுவதும் உண்டு.

இனி வேண்டுமென்றே மாற்றிய பாடவேறுபாடுகளை நோக்குவோம். பாலகாண்டம், திருவவதாரப் படலத்திற் கண்ட ஒரு வேறுபாடு நோக்கத் தக்கது. அரக்கர் கொடுமைக்கு ஆற்ருத அமரர்கள் முதலில் சிவனிடம் சென்று முறையிட்டனர் என்பதைக் குறித்த பாடல் வருமாறு:—

" சுடுதொழி லரக்கராற் றெலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் யாமினி
அடுவதில் லெனமறுத் தவரொ டேகினுன்."

இப்பாடல் பல ஏட்டுச் சுவடிகளிலும் அச்சுப்புத்தகங்களிலும் இவ்வாறே காணப்படுகிறது. தேவர்கள் முதலில் சிவனிடம் சென்று முறையிடுதற்குரிய காரணத்தை, "கடுவமர்களன்" என்ற சொற்களால் கம்பன் நன்கு புலப்படுத்துகிருன். திருமால், பிரமன், இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களும் தோற்ருேடும்படி உலகையே வாரிவிழுங்கிய ஆலகால நஞ்சினைச் சிவன் வாரிவிழுங்கித் தேவர்களையும் யாவர்களையும் காத்தருளினுன் அல்லவா? அந்த ஆற்றலையும் முதன்மையையும் உதவியையும் எண்ணி நன்றியறிதலோடு, தேவர்கள் சிவன் திருவடியை வணங்கி முறையிட்டனராம். 'படுபொருள் உணர்ந்த அப்பரமன்' என்று சிவனைக் கம்பன் சிறப்பிக்கிருன். ஆனல் ஈற்றடி, 'அடுவதில் லெனமறுத் தவரொ டேகினுன்' என்று இருக்கிறது. எங்கே ஏகினுன் என்று இடத்தைச் சுட்டாமல், வெறுமனே ஏகினுன் என்று கம்பன் பாடுவானு? ஏகின இடத்தை அடுத்த பாடல் நிகழ்ச்சி கொண்டு குறிப்பிற் பொருளுணர வைப்பது முறையா? அடுத்த பாடலில் சிவன் சென்று பிரமன் காலில் விழுந்து முறையிட்டான் என்று வந்துள்ளது. அவரொடேகிய சிவன் மட்டும் தான் பிரமன் காலில் விழுந்தானு? அவர் என்ற தேவர்கள் என்ன ஆனுர்கள்? அவர்கள் பிரமன் காலில் விழவில்லையா? சிவன் சென்று அவ்வாறு முறையிடக் காரணமே இல்லை. இராவணனுக்கு நாளும் வாளும் கொடுத்து ஊற்றம் பெறச்

செய்தவன் சிவன். இராவணன் ஒரு சிறந்த சிவபக்தன். அவ ஞல் சிவனுக்கு எந்தவிதமான இடையூறும் ஏற்படவில்லை. சிவன் அவ்வாறு முறையிட்டிருக்க முடியாது. கம்பன் இப்படிப் பாடமாட்டான். இங்குக் கிடைக்கக் கூடிய பாட வேறுபாடு களையும் அச்சுப் புத்தகங்கள் காட்டவில்லை. ஆனால் இரண்டு பழைமையான நல்ல நம்பத் தகுந்த ஏடுகளில் ஈற்றடி வேறு பாடம் கொண்டு திகழ்கிறது. "அடுகில மாயனே டறைதி ரென்னவே" என்பது அந்தப் பாடம். 'திருமாலினிடம் சென்று கூறுங்கள்' என்று மேல்நடக்க விருப்பவற்றை யறிந்த சிவன் கூறினன் என்பது மிகப்பொருந்துவதாகும். இதனை யடுத்து ஒரு பாடல் அந்த இரண்டு சுவடிகளிலும் காணப்படுகிறது :—

"கறைமிடற் றிறைசொலக் கடவு ளோர்களும்
மறைதெரி முனிவரும் வச்சி ராயுதத்
திறைவனும் வணங்கிநின் றெழுந்து போந்துயர்
நிறைமல ரவனிட நண்ணன் மேயினர்"

இது கதைத் தொடர்ச்சிக்குப் பொருத்தமாக அமைந்துள்ளது. ஆனல் சிலர் இப்பாடலை வேண்டுமென்றே மறைத்து விட்டு 'அவரொடேகினன்' என்று முன்பாட்டைத் திருத்தினர்கள். சிவனையும் தேவர்களோடு இழுத்துச் செல்லக் கருதியே பின் வந்தோர் இம்மாற்றத்தைச் செய்தனர். பின்வரும் பாடல்களில் இந்திரனைப் பற்றிய குறிப்பை யெல்லாம் சிவமயமாக்கினர். பின்னர், திருமாலின் முன்னர் தேவர்கள் தாம் பிறக்கப் போகும் முறையைக் கூறவந்த இடத்து, வாயு அநுமனுகப் பிறப்பேன் என்ருன். பிறப்பேயில்லாத சிவனையும் திருமால் முன்கொண்டு நிறுத்திய இடைச் செருகற்காரர்களுக்குச் சிவனை என்ன செய் வது என்று தெரியவில்லை. ஆனல் அவனைச் சும்மாவிடலாமா? அவனையும் வாயு புகுந்த அநுமானுக்குள்ளேயே வைத்து அமுக்கி விட்டார்கள். அச்சுப்புத்தகங்களில் அப்பாடல் வரு மாறு :—

"வாயுமற் றெனதுகூறு மாருதி யெனலு மற்றோர்
காயுமர்க் கடங்க ளாகிக் காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோ மென்ருர் புராரிமற் றியானே வாத
சேயெனப் புகன்ருன் மற்றைத் திசையுளோர்க் கவதி யுண்டோ"

ஒருவனுக்குள்ளே இருவர் புகுந்தார் என்பது எங்கும் இல்லாத ஆச்சரியம் அல்லவா? இதனால் கம்பன் பாடலுக்குள்ளே ஒரு கொம்பனும் புகுந்திருக்கிறான் என்பது தெரியவரும். இப் பாடலின் உண்மையான பாடம் அவ்விரண்டு சுவடிகளிலும் வருமாறு :—

"வாயுமற் றெனது கூறு மாருதி யெனலு மற்றோர்
காயுமற் கடங்க ளாகிக் காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோ மென்றார் புயல்வண்ண னுதிவானோர்
மேயின ரென்னி லிந்த மேதினிக் கவதி யுண்டோ"

இங்கே சிவன் தேவர்களோடு பிரமனிடத்தும் திருமாலி னிடத்தும் சென்றானா? இல்லையா? என்பது கேள்வி. "அடுகில மாயனோடு அறைதிர் என்னவே" என்பது ஒரு பாடம். "அடு கிலம் எனமறுத்து அவரொடு ஏகினன்" என்பது ஒரு பாடம். இவற்றுக் கேற்பப்பின்னுள்ள இருபது பாடல்களில் மாற்றங் கள் ஏற்பட்டுள்ளன. இவற்றுள் எது உண்மையான பாடம்? கம்பன் எவ்வாறு பாடியிருப்பான்? என்பதை நாம் கூர்ந்து ஆராயவேண்டும். இரண்டு ஏடுகளில் மட்டுமே சிவன் ஏக வில்லை என்று காணப்படுகிறது. மற்ற எல்லா ஏடுகளிலும் சிவன் ஏகினன் என்றே உள்ளது. இது சில ஏடு எழுதுவோர் செய்த மாற்றமேயாகும். அதற்கேற்ற பாடங்கள் சிவனைத் திருமாலின் முன் விழுந்து பணிந்து எழுந்து நின்று குறைபடும் படியாகச் செய்து, அம்முறையால் திருமாலுக்கு ஓர் ஏற்றம் கற்பிப்பதற்காகப் புகுத்தப்பட்டவையாகும். சைவமக்களின் மனங்களைப் புண்படுத்துபவையாகவும் தெரிகின்றன. இது கம்பனுடைய கொள்கைக்கு ஒவ்வாததொன்று. திருமாலுக்கு இயல்பாகவே உள்ள சிறப்பு என்றும் அழியாதது. அதற்காக இத்தகைய வேண்டாத வழிகளை ஒருசிலர் கையாண்டிருப்பது வருந்தத் தக்கது. சிவபெருமானைக் குறைப்படுத்தித் தான் திருமாலுக்கு ஏற்றம் ஊட்டவேண்டும் என்பதில்லை.

இத்தகைய கட்டங்களில் நாம் காய்தல் உவத்தல் இன்றி உண்மையைக் காண வேண்டும். கம்பனுடைய கருத்தையும் போக்கையும் நாம் காவியம் முழுதிலும் தொடர்ந்து சென்று

காணும் போது, எந்தச் சமயத்தையும், எந்தக் கடவுளையும் எவ்விதத்திலும் இழிவுபடுத்த வேண்டும் என்பது அவன் எண்ண மாகத் தோன்றவில்லை. பலசமயங்களுடைய பொதுமையையும் ஒருமையையும் அவன் ஆங்காங்கு எடுத்துக்கூறத் தயங்கிய தில்லை. "அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும் அறிவிலார்க்குப், பரகதி சென்றடைவரிய பரிசே போல்" என்று கிட்கிந்தா காண்டம், நாடவிட்ட படலத்தில் சிறப்பாகப் பாடிய கவிஞன், இவ்வாறு சிவனைக் குறைவுறப்புகுத்திப் பாடியிருக்க மாட்டான் என்பது திண்ணம். மேலும், இராமனைத் திருமாலின் அவதாரம் என்று கொள்ளாமல், "சூலமுந்திகிரிசங்குங் கரக முந்துறந்து தொல்லை, ஆலமுமலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி வந்தான்" என்று மூவரின் அவதாரமாகவே முழங்கி மகிழ்கின்றான். மற்றும், கம்பன் சிவனிடத்தில் அதிகப்பற்றும் மதிப்பும் கொண்டவன் என்பதற்கும், சிவனு டைய இயல்புகளை நன்கு விரிவாக உணர்ந்திருந்தான் என்ப தற்கும் சான்றாக நூற்றுக்கணக்கான குறிப்புக்களை இராமாவ தார நூலிற்காணலாம். மேலும், அஞ்சிலே யொன்று பெற்றா னாகிய அநுமனை வாதசேய், காற்றின் மைந்தன் என்று கூறு வதுபோல், சிவன் சேய் என்றோ, சிவன்அம்சம் என்றோ, சிவன் கூறு என்றோ, நூலில் வேறு எங்கும் கூறப்படவில்லை. இதி லிருந்தே மேலே குறித்த மாற்றங்கள் அதிகமான ஏடுகளிற் காணப்பட்டாலும், அவை இடைச்செருகல் என்பது நன்கு தெரியவரும். வான்மிகத்திலும் இதற்கு எந்தவிதமான ஆதார மும் கிடையாது. அங்கு ஏகாதசருத்திரரைக் குறித்துள்ளாரே தவிர, சிவன் திருமாலிடம் சென்றதாகவாவது, குறையிரந்த தாகவாவது, அநுமனாகப் பிறந்ததாகவாவது யாதொரு குறிப் பும் கிடையாது. அண்ணாமலைப்பல்கலைக் கழகம் வெளியிட்ட இராமாவதாரப் பதிப்பில்தான் இவ்வுண்மைகள் முதன் முத லாகக் கண்டு உலகிற்கு வெளியிடப்பட்டன. இவைபோல் ஆயிரக்கணக்கான திருந்திய நல்ல உண்மையான கம்பன் பாடங்கள் இன்னும் நமக்குக் கிடைக்கவிருக்கின்றன.

---

# மதுரைக் கலம்பகம் உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணுமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 12, இதழ் 10-ன் தொடர்ச்சி)

வரியளி பொதுளிய இதழியொ டமரர்
மடந்தையர் நீல வனம்புக் கிருந்தன
மதியக டுடைபட நெடுமுக டடைய
நிமிர்ந்தபொன் மேரு வணங்கப் பொலிந்தன
மழகதிர் வெயில்விட வொளிவிடு சுடர்வ
லயங்கொடு லோக மடங்கச் சுமந்தன
மதுகையொ டடுதிறல் முறைமுறை துதிசெய்
தணங்கவ ராடு துணங்கைக் கிணங்கின

இசைப் பாட்டையுடைய வண்டுகள் மொய்க்கின்ற கொன்றைப்பூ மாலையோடு வானுலகத்துப் பெண்களது கண்களாகிய நீலோற்பலப் பூத்தொகுதிகள் அடைந்திருந்தன; சந்திரனது வயிறு உடையும்படி நீண்ட உச்சி சென்று சேர்ந்த பொன் மயமான மேருமலையானது வளையும்படி விளங்கின; இளமையான சூரியனது வெய்யில் போல ஒளி விடுகின்ற சுடர்மிக்க தோள்வளையை அணிந்து உலகங்கள் அனைத்தையும் தாங்கின; தோள் வலிமையோடு பகைவரைக் கொல்லுந் திறமையையும் முறை முறையாகத் தோத்திரம் செய்து பேய்கள் ஆடுகின்ற துணங்கை என்னும் கூத்துக்கு இசைந்திருந்தன;

பொருசம ரிடையெதிர் பிளிறுமோர் களிறு
பிளந்தொரு போர்வை புறஞ்சுற்றி நின்றன
புகையெழ வழலுமிழ் சுழல்விழி யுழுவை
வழங்குமொ ராடை மருங்குற் கணிந்தன

புலவெயி றயிறரு குருதியொ டுலவு
மடங்கலின் வீர மொடுங்கத் துரந்தன
புகலியர் குரிசில்பண் ணுெடுதமி ழருமை
அறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன

எதிர்ப்பையுடைய போர்க்களத்திலே முன்வந்து பேரொலி செய்த யானை யொன்றைப் பிளந்து அதன் பெரிய தோலைப் புறத்திலே சுற்றி நின்றன; புகையெழும்படியாக நெருப்பைக் கக்குகின்ற சுழலுகின்ற விழியையுடைய புலி தந்த அதன் தோலாகிய ஆடையை அரையிலே உடுத்தன; புலவு நாற்றத்தை யுடைய பற்களோடும் பருகுகின்ற குருதியோடும் உலாவுகிற சிங்கத்தினது வீரம் ஒடுங்கும்படி செய்தன; சீகாழிப் பதி யினர்க்குத் தலைவராகிய, திருஞான சம்பந்த மூர்த்திகளது பண்ணோடு கூடிய தமிழின் அருமையை அறிந்து ஒப்பற்ற பொற்றாளத்தை அவருக்கு வழங்குவதற்கு முற்பட்டன;

உருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாண னுெதுங்கத் திரிந்தன
உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துணி மேலிடு வெண்பிட் டுகந்தன
உறுதியொ டவள்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடைமண் உந்திச் சொரிந்தன
உருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன

பெரிய இடியைப் போலப் பேரொலி உண்டாகும்படி எதிரே கோபங்கொண்டு நடந்து சென்று ஒரு பாணன் ஒழியும் படி அவனது உடம்பை வெட்டின; உருக்கமான நெஞ்சத்தோடு வந்தி யென்னுங் கிழவி யொருத்தி அணைத்து அழுக்குப் படிந்த கந்தையின் மேலிட்ட வெண்பிட்டை விரும்பி எடுத்தன; துணி வோடு அவள் வீட்டிற்குச் செல்லும் வரையில் விரைவாகச் சுமந்து ஒரு கூடை மண்ணை வைகைக் கரையில் எழும்பிக் கொட்டின; உருவிய உடைவாளுடனே எதிரிலே வந்த பாண்டிய மன்னனது பிரம்படியைப் பார்த்து நடுக்கத்தை அடைந்து நிலை கலங்கின;

தருசுவை யமுதெழ மதுரம தொழுகு
 பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன
தளிரியல் மலைமகள் வரிவளை முழுகு
 தழும்பழ காக அழுந்தக் குழைந்தன
தளர்நடை யிடுமிள மதலையின் மழலை
 ததும்பிய ஊறல் அசும்பக் கசிந்தன
தமிழ்மது ரையிலொரு குமரியை மருவு
 சவுந்தர மாறர் தடம்பொற் புயங்களே. 12

சுவையை வழங்குகின்ற அமுதத்தின் தன்மை பொருந்த இனிமை ஒழுகுகின்ற பசிய தமிழ்ப் பாடல்களாலாகிய மாலைகளை மிகுதியாகச் சூடின; தளிர்போன்ற மென்மைத் தன்மையை யுடைய மலைமகளது நிறைந்த வளைகள் அழுத்திய தழும்பானது அழகாக அழுந்தும்படி குழைந்து கொடுத்தன; தளர்ந்த நடையை இடுகின்ற இளமதலையாகிய முருகப் பெருமானது மழலை ததும்பிய வாயூறல் தெறிக்க அதனல் ஈரமாயின; செந் தமிழ் வழங்கும் மதுரை யம்பதியில் தோன்றிய ஒப்பற்ற குமரி யாகிய மீனுட்சியம்மையை மணந்த சௌந்தர பாண்டியராகிய சொக்கேசப் பெருமானது பெரிய அழகிய தோள்கள்.

புயல்வண்ண மொய்குழல் பொன்வண்ணந் தன்வண்ணம் போர்த்தடங்கண்
கயல்வண்ண மென்வண்ண மின்வண்ண மேயிடை கன்னற்செந்நெல்
வயல்வண்ணப் பண்ணை மதுரைப் பிரான்வெற்பில் வஞ்சியன்னுள்
இயல்வண்ண மிவ்வண்ண மென்னெஞ்ச மற்றவ் விரும்பொழிலே. 13

நான் கண்ட மங்கையினது அடர்ந்த கூந்தல் மேகத்தின் நிறமானது. அவளது உடம்பின் நிறம் பொன்னிறமாகும். போர் செய்கின்ற அகன்ற கண்கள் கயல்மீனை யொத்தவை. இடை எனது தன்மையையும் மின்னலின் தன்மையையும் உடை யது. கரும்பும் செந்நெலும் விளைகின்ற அழகிய வயல்களை உடைய மருதநிலஞ் சூழ்ந்த மதுரைப் பதியிலுள்ள சொக்கேசப் பெருமானது மலையகத்தில் பூங்கொடி போன்றவளாகிய அம் மங்கையினது வடிவத்தின் தன்மை இவ்வாருயது. அவள் தங்கியிருக்கின்ற சோலை என்னுடைய நெஞ்சமாகும்.

இருவருக்குங் காண்பரிய ஈசர்மது ரேசனூர்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே யாமாயின்
அருமையுடம் பொன்றிருகூ றுவதே னம்மானை
ஆனாலும் காயமில்லை ஐயரவர்க் கம்மானை. 14

திருமாலும் பிரமனுமாகிய இருவருக்கும் காண்டற் கரியவ ராகிய முதற் பரம்பொருளான மதுரேசர் தனது வெற்றியைப் புலப்படுத்தும் பேச்சைப் பேசி ஒருசித்தனது உடலுறுப்புக்களை வெட்டி அவனை வெற்றி கொண்டார். அங்ஙனம் விருதுகட்டி அங்கம் வெட்டி வெற்றி கொண்டாராயின் அவரது அருமை யான ஒரு உடம்பு இரண்டு கூறு உடையதாக ஆனதற்குக் காரண மென்ன? அப்படி ஆனாலும் தலைவராகிய அவருக்கு உடம்பில் ஒரு காயமும் கிடையாது.

அம்ம கோவெனும் விழும்அழும்
எழுந்துநின் றருவிநீர் விழிசோரும்
விம்மும் ஏங்குமெய் வெயர்த்துவெய்
துயிர்க்குமென் மெல்லியல் இவட்கம்மா
வம்மின் மாதரீர் மதுரையும்
குமரியும் மணந்தவர் மலர்த்தாமம்
தம்மி னேவெனுந் தவப்பயன்
பெரிதெனுந் தந்தைதா ளெறிந்தார்க்கே. 15

அம்மகோ என்பாள்; விழுவாள்; அழுவாள்; எழுந்து நின்று விழிகளில் இருந்து அருவியைப் போல நீரைச் சொரி வாள்; விம்முவாள்; ஏங்குவாள்; உடம்பு வெயர்த்து வெம்மை யாகப் பெருமூச்சு விடுவாள். எனது மெல்லியலாகிய இவள் அந்தோ பெண்களே வாருங்கள்; மதுரையையும் குமரியையும் மணந்தவராகிய சொக்கேசரது பூமாலையைத் தாருங்கள்; என்று சொல்லுவாள். தந்தைதாள் எறிந்தவராகிய சண்டேசுர நாய னாரது தவத்தின் பயன்மிகப் பெரியதாகும் என்பாள்.

எறிவே லிரண்டுமென துயிர்சோர
உண்டுலவ இகல்வா ளிரண்டு விசிறு

வெறிசேர் கடம்பவன மதுரேசர்
முன்குலவி விளையாடு மின்கொ டியனீர்
சிறுநூல் மருங்குலிறு மிறுமாகொ
லென்று சிலநூ புரஞ்சொன் முறையி
டறியீரெ னெஞ்சுமல மரவேசு
ழன்றிடுநு மதிவேக நன்ற றவுமே. 16

எறிகின்ற வேற்படையை ஒத்த இரண்டு கண்களும் எனது உயிரானது சோரும்படி அதனை உண்டு உலாவ எதிர்த்து வருகின்ற இரண்டு வாளாயுதங்களை விசிறிக் கொண்டு நறுமணம் வீசுகின்ற கடம்பவனமாகிய மதுரைப் பதிக்குத் தலைவராகிய சொக்கேசர் திருமுன்பே குலவி விளையாடுகின்ற மின்னற் கொடியை ஒத்தவர்களே! சிறிய நூல்போன்ற இடையானது ஒடிந்து விடும் ஒடிந்து விடுமென்று ஒலிக்கின்ற காற்சிலம்புகள் எழுப்புகின்ற முறை யீட்டை அறிய மாட்டீர்கள். எனது மனமும் அலமரும்படி சுழலுகின்ற நுமது மிகுந்த வேகம் மிகவும் நன்று.

அறந்தந்த பொன்பொலி கூடற் பிரான்வெற்பி லம்பொற்படாம்
நிறந்தந்த கும்ப மதயானை யுந்நெடுந் தேர்ப்பரப்பும்
மறந்தந்த விற்படை வாட்படை யுங்கொண்டு மற்றொருநீ
புறந்தந்த வாவணங் கேநன்று காமவெம் போரினுக்கே. 17

எல்லா வகையான அறங்களும் அமைந்த செல்வம் மிகுந்து விளங்குகின்ற மதுரைப் பெருமானது மலையகத்தில் அழகிய பொன்னால் வேலைப்பாடுகள் செய்யப்பெற்ற ஆடையையுடைய நல்ல நிறம் பொருந்திய மத்தகத்தை யுடைய மத யானையையும் நீண்டகன்ற தேர்த் தட்டையும் வலிமை மிகுந்த விற்படை வாட்படைகளையும் கொண்டு மன்மதனோடு நீ செய்த காமக் கடும் போரில் அணங்கே! நீ புறந்தந்தது நன்றாயிருக்கிறது.

போரானை முதுகுறைப்பப் பொறையாற்றுஞ்
சினகரத்துப் புழைக்கை நால்வாய்க்
காரானைப் போர்வைதழீஇ வெள்ளானைக்
கருள்சுரந்த கடவு ளேயோ

ஓரானை முனைப்போருக் கொருகணைதொட்
டெய்திடுநீர் ஒருத்தி கொங்கை
யீரானை முனைப்போர்க்கும் வல்லீரேல்
ஒருகணைதொட் டெய்தி டீரே. 18

போர்ச் செயலில் வல்ல எட்டு யானைகளின் முதுகுகளும் வருந்தும்படி தாங்குகின்ற திருக்கோயிலில் துளையையுடைய கையையும் தொங்குகின்ற வாயையுமுடைய கரிய யானைத் தோலைப் போர்த்து விண்ணுலகத்து வெள்ளையானையின் சாபந் தீர்த்து அருள் புரிந்த கடவுளே! ஒரு யானை முனைந்து எதிர்த்த போரில் ஒரேகணையை எய்து அதனைக் கொன்ற நீர் ஒருத்தியாகிய எனது தோழியின் கொங்கைகளான இரண்டு யானைகள் எதிர்க்கின்ற போருக்கும் வல்லவராயின் ஒரு கணையை வைத்து எய்து வெற்றி கொள்விராக.

[தொடரும்]

# ஸ்ரீ சொக்கநாதசுவாமி திருவருட்பா

**மாணிக்கவாசக அடிகள்**

---

**கட்டுரை – 10**

[மலர். 12, இதழ் 10, பக்கம். 558-இன் தொடர்பு.]

“ முக்குணம் அகற்றி மும்மலம் அகற்றி
மூவகை அவத்தையும் அகற்றி
முத்திற விருப்பும் அகற்றிநின் அடியை
முன்னிநின் றுடல்பொருள் ஆவி
தக்கவ நினக்கே அடைக்கலம் என்னத்
தந்துநின் நிருமல சுகத்தில்
சார்ந்தினி திருக்க எளியனேற் கருளுந்
தன்மைநின் தகைமைய தன்றே?
முக்கணு முதல்வா முப்புரம் எரித்த
மூர்த்தியே நீற்றெளி பழுத்த
முண்டகா எண்தோள் அத்தனே என்புன்
மொழியும் ஆதரித்திடும் முதலே
திக்குகள் அனைத்தும் போற்றும்புண் ணியனே
திருந்திய என்மனக் கோயில்
சிறந்திடும் தருமை வளர்சொக்க நாதச்
செல்வமே சிற்சுகோ தயமே ” (10)

சிவபரம் பொருள் குணரகிதப் பொருள். எக்குணமும் இல்லாத செம்பொருள். குணம் அல்லாத குணமான எண் குணப்பொருள். அவ்வெண்குணத்தான் தாளை வணங்கு வார்க்கும் எண்குணமே குறிக்கோள். ‘குறிக்கோள் இலாது கெட்டேன்’ என்று கூறிக், குறிக்கோள் கைவரப் பெற்று, “இன்பமே எந்நாளும்; (எந்நாளும்) துன்பம் இல்லை” என்று வெளியிட்டருளிய திருநாவுக்கரசர் “ எண்குணத்துளோம் ” என்று தாம் பெற்ற நிறைவை வெற்ற வெளியிற் கொண்டு உணரச் செய்ததையும் இங்கு யாவரும் அறியக்கடவர். எண்

குணநிலை உறவேண்டுவார் முக்குணமும் ஒழியப் பெறுதல் வேண்டும். சத்துவகுணம், ரசோகுணம், தமோகுணம் மூன்றும் உயிர்கட்கே உரியன. மாயாகாரியப் பொருள்கள் அக்குணங் களை வளர்க்கும் சாதனம் ஆக உள்ளன. அவ்வுண்மையை உணர்ந்தே, நம்முன்னோர் நாம் நுகர் பொருள்களில் இன்ன பொருள் இன்ன குணத்தை விளைக்கும் என்றும், வளர்க்கும் என்றும் எழுதி வைத்தனர்.

சத்துவகுணப் பொருளையே உண்போர் சத்துவகுண விருத்தியே உடையவராய்ச் சன்மார்க்கத்தில் ஈடுபட்டு இன் புறுவார். கடவுள் வழிபாடு புரிவார்க்குச் சத்துவகுணநிலையே இன்றியமையாதது. ஞானிகளுக்கு எக்குணமும் வேண்டாதன. முக்குணவசத்தில் இருப்பது அருட்குணம் உடையவர்க்குத் தகாது. அதனால், முக்குணம் அகற்றி நிருமலசுகத்தில் இருக்க அருளும் என்றார்.

மும்மலம் ஆணவம், மாயை, கன்மம் என்பன. மூவகை அவத்தை கேவலம், சகலம், சுத்தம் என்பன. முத்திற விருப்பு மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என்பன. முக்குணங் களும், மும்மலங்களும், மூன்றவத்தைகளும் மூன்று விருப்புக் களும் அகற்றியவரே திருவடிநிழலில் வாழ்வர் என்பது சித் தாந்த சைவத்தின் உட்கோள். சுத்தாவத்தையை அகற்றுதல் என்பது காரிய சுத்தாவத் தையைக் குறித்தது, காரணசுத்தா வத்தையை அகற்றல் என்றும் இல்லை. காரியாவத்தையுள்ளும் சுத்தத்துட் சுத்தாவத்தையை அகற்றல் வேண்டுவதில்லை. கேவலசுத்தம் சகலசுத்தம் இரண்டும் அகற்றற்குரியனவே. அவத்தை ஞானம் கட்டுரையைக் கற்றுணர்தலால் வரத்தக்க தன்று. அதனால், இதில் விரித்தெழுதுவது வீணேயாகும். அவத்தை என்பது உயிரின்நிலை வேறுபாட்டைக் குறித்தது. தத்துவச் சார்புறுவதன் முன்னிலை கேவலம். தத்துவச் சார்புற்ற நிலை சகலம். தத்துவச் சார்பு அற்றநிலை சுத்தம். இம்மூன்றன் இலக்கணத்தை முதலில் அறிதல் இன்றியமையாதது. காரணா வத்தை மூன்றும் காரியாவத்தையின் (பெத்தம் முத்தி இரண்டி லும் படும்) முப்பதும் உணர்ந்தோர் வாயிலாக உணர்தலே விளக்கம் தரும்.

திருவடி நினைவு தம் உடல் பொருளாவியைத் தம் குரு நாதர்பால் தத்தம் பண்ணினவர்க்கே இடைவிடாது இருக்கும். உடற்பற்றும் பொருட்பற்றும் உயிர்ப்பற்றும் உள்ளவர்க்கு அம்மூன்றும் அவற்றின் சார்பும் அன்றி வேறுயாதும் நினைவில் நில்லா. அன்றே என்றன் ஆவியும் உடைமை எல்லாமும் குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ' என்ற மாணிக்கவாசகப் பெருமான், அவற்றின் பயன் இன்னது என்று தெளிவிப்பாராய், 'இன்று ஓர் இடையூறு எனக்கு உண்டோ?' என்றருளியது காண்க. இடையூறு உற்ற காலத்தில் இடையூறு சிறிதும் எய்தாமல் திருவாய்மலர்ந் தருளிய உண்மை இது. இம்மூன்றையும் இறைவனுக்கே அடைக்கலமாக்கியவர்க்கு நிருமலசுகம் அன்றி வேறு அசுகம் என்றும் இன்று.

மூன்று மூன்ருக உள்ள குணமும் மலமும் அவத்தையும் விருப்பும் அகற்றத்துணையாயுள்ள மெய்ப்பொருள், சிவமாகிய செம்பொருளே என்பதை உளங்கொண்டு, 'முக்கணு' 'முப்புரம் எரித்த மூர்த்தியே' என்று விளித்தார்.

நீற்ருெளிபழுத்த முண்டகா - பவளம் போல் மேனியிற் பால் வெண்ணீறு. முண்டகம் - தாமரை. 'அலங்கலந்தாமரை மேனியப்பா' 'செந்தாமரைக்காடனைய மேனித்தனிச்சுடரே' 'செங்கமல மலர்போல் ஆர் உருவாய என்னுரமுதே' எனவரும் திருவாசகங்களை ஈண்டு நினைக்க. 'முண்டகா' என்றதால் திருமுண்டம் தீட்டமாட்டா.

மனக்கோயில் :- 'உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே' என்று திருவாய் மலர்ந்த பரம்பரைக்குணம். 'என்னெடுங் கோயில் நெஞ்சு' என்பது தஞ்சை யிராச ராசேச்சுரத் திரு விசைப்பா. சொக்கநாதர் திருவடிதுணை.

(முற்றிற்று)



# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 10-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

10 ஆதியாயநான்முகனுமாலுமறிவரிய
சோதியானேநீதியில்லேன்சொல்லுவதுன்றிறமே
ஓதிநாளுமுன்னையேத்துமென்னைவினையவலம்
வாதியாமேவந்துநல்காய்வலிவலமேயவனே.

No one can know Siva unless He chooses to reveal Himself. This thought constantly recurs with great emphasis. Its favourite expression is in the first legend of the four told in our introduction. Hymn singers are fond of contrasting with the vain search of Brahma and Vishnu the revelation of Himself which Siva has graciously granted to them. Compare stanzas 25 and 48.

10 Thou Light whom Brahma, being's fount, and Vishnu could not see,
No righteousness have I, I only speak in praise of Thee.
Come, Valivalam's Lord, let no dark fruit of deeds, I pray,
Torment Thy slave who with his song extols Thee day by day.

(To be Continued)

---

# மறந்தான் - மறந்திலாதான்!

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள், எம். ஏ.,
412. இடையர் தெரு, தஞ்சாவூர்.

ஒரு பாட்டிலே இருவேறு நிலைகளையும் எடுத்தியம்பி உள்ள உணர்வை ஓங்கச் செய்கின்றான் ஒண்தமிழ்க் கம்பன்; மாறு பட்ட கருத்துக்களை, முரண்பட அமைப்பதால் சுவையுணர்வு மிகுவதோடு சொற்செறிவும் பொருளாழமும் உண்டாகின்றன. ஒன்றை நேர்பட மொழிவதிலும், ஒப்பிட்டுக் காட்டுமாற்றான்-உண்மை யுணர்த்துமாற்றான், நயம்பட-நெளிவும் குழைவும் தோன்றக் கூறுவதில்தான் உயர்வு உண்டு; உறுபயனும் உளது.

ஒரு கருத்தையோ செயலையோ அப்படியே சொல்லிச் செல்வதைக் காட்டிலும், கருத்தின் குற்ற நற்றங்கள் தோன்றவும், செயலின் உயர்வு தாழ்வும், ஏற்றமும் இழிவும் விளங்கவும் உரைத்திடும் முறையில் தான் நிறைந்த பயனுண்டு; நிரந்தர இன்பமும் உண்டு - இத்திறத்தில் இணையற்று விளங்குகின்றான் செந்தமிழ் வம்பனும் நந்தமிழ்க் கம்பன்.

இரண்டிடங்களில் இவனது இத்திறம் எடுப்பாக அமைந்துளது. ஒன்று: ஆரணிய காண்டத்தில் அமைவது; இன்னொன்று யுத்த / காண்டத்தில் காணப்படுவது. இரண்டும் இராவணனைப் பற்றியதே! ஒன்று அவனது ஆட்சியின் மாட்சிக் காலத்தில் கூறப்படுவது; மற்றொன்று அவனது வீழ்ச்சி நிலையில் விளம்பப்படுவது. முன்னது அவனது காதல் பற்றியும் பின்னது அவனது வீரம்பற்றியும் கூறப்பட்டதாகும். முன்னது அவனது வீழ்ச்சியின் காரணத்தைக் குறிக்கும். பின்னது வீழ்ச்சியால் அவன் பட்ட வேதனைத் துயரினை விளம்பும்.

ஒன்று மறந்தான், மறந்தான் ..............மறந்திலாதான் என வருவது; பிறிதொன்று, நோக்கான், நோக்கான் .......... நோக்கினுன் என்றமைவது.

அடாது செய்து அவமானப்பட்டு, அங்கபங்கமாகி மூக்கறுந்து திரும்பிய சூர்ப்பனகை, அண்ணன் இராவணனிடம் சீதையின் அழகையெல்லாம் மிடுக்காக அடுக்கிக் கூறினுள். மஞ்சு ஒக்கும் அளகஓதி, மறை யொக்கும் வடித்த கூந்தல், பஞ்சு ஒக்கும் அடிகள், செய்ய பவளத்தின் விரல்கள், அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக்கொண்ட அழகின் செல்வி சீதையின் செவ்வி யனைத்தும் கூறக் கேட்டு வந்த இலங்கை வேந்தன் மையல் மீதுற்று மதி மயங்கினுன். தங்கை சொல்லச் சொல்ல அண்ணன் உள்ளத்தில் காம இச்சை கடிது விளைந்து நெடிது பெருகிற்று.

அவள் கூறி முடிக்கும் முன்னரே அவன் உள்ளம் அவள் (சீதை) வயமாயிற்று; அனைத்தையும் மறந்தான்; அவளை மட்டும் மறந்தானில்லை. அரனையும் வெற்றிகொண்ட காமனது அம்பின் ஆற்றல் அவனை அங்ஙனம் ஆட்டி வைக்கிறது! தங்கை மூக்கரியப் பட்டதையும் மறந்தான்; கரனையும் மறந்தான்; தன் வலிமையையும் மறந்தான்; உற்ற பழியையும் மறந்தான்; முன்பு பெற்ற வரங்களையும் மறந்தான்; ஆனுல் இவ்வளவையும் மறந்தவன், தங்கை சொல்ல அறிய வந்த அம்மங்கையை மட்டும் மறந்தானில்லை. இதோ கவி:

கரனையு மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்து நின்ருன்
உரனையு மறந்தான்; உற்ற பழியையு மறந்தான்; வெற்றி
அரனையுங் கொண்ட காம னம்பினுன் முன்னைப் பெற்ற
வரனையு மறந்தான்; கேட்ட மங்கையை மறந்திலாதான்.

(ஆரணியா - மாரீசன் வதை - 83)

தன் தம்பியராய கரன் முதலானேர் இராமனுற் கொல்லப்பட்டமையால் நேர்ந்த துயரம் அவன் மனத்தைவிட்டு அகன்றது; தன் ஒரே தங்கை மூக்கிழந்தமையால் நேரும் மான வுணர்வையும் மறந்தான்; தன் வலி கொண்டு தம்பியர் உயிரை நீக்கித்

தங்கையின் மானத்தைப் போக்கிய இராம இலக்குவரைத் தாக்கி யொழிக்க வேண்டுமென முன் எண்ணிய எண்ணத்தையும் அறவே மறந்தான்; அங்ஙனம் செய்ய வேண்டுவதைச் செய்யா மையால் வந்தெய்தும் பழியையும் நினைத்தானில்லை; அருந்தவம் செய்து பெருவரம் பல பெற்ற தான் பழிநிலைக்கு ஆளாதல் கூடாது என்பதை எண்ணுமையால், பெற்ற வர மேன்மையும் மறந்து போனுன். ஆனுல் சீதையை மட்டும் மறந்தானில்லை; இவ்வளவையும் மறந்தவன் இவளை மட்டும் மறக்கவில்லை!

எவற்றை யெல்லாம் மறக்கக் கூடாதோ, அவற்றை யெல்லாம் மறந்தான்; எதனை எண்ணவும் கூடாதோ அதனை எண்ணினுன்; எதனைக் கனவிலும் கருதலாகாதோ அதனைக் கருதினுன்; எதனை மறக்க வேண்டுமோ அதனை மறந்தானில்லை. இதனை மறக்காமையால் அனைத்தையும் மறந்தான்; இதனை மறந்திருப்பானேயாகில் அனைத்தையும் நினைந்திருப்பான். மறக் கக் கூடாத பலவற்றை மறந்தான்; மறக்க வேண்டிய ஒன்றை மறந்தானில்லை.

மறக்க வேண்டாததை மறந்தான், எனவே அனைத்தையும் துறந்தான்; மறக்க வேண்டியதை மறந்தானில்லை; எனவே இறக்க வேண்டியதாயிற்று. அனைத்தையும் மறந்தவன் இதனை யும் மறந்திருந்தால் கூட அவன் நிலை அங்ஙனமாயிருக்காது; அவனும் இறந்திருக்கமாட்டான். சீதையை மறக்காத செயலே இதயமாம் சிறையில் வைத்த செயலே அவனது சீரழிவிற்கும், உயிரிழப்பிற்கும் காரணமாகியது.

சீதையை இராவணன் மறந்தானில்லை என்று கூறியிருப் பின், அவனது செயலின் இழிவோ, அவலத்தின் ஆழமோ, நம் இரக்கத்தின் உருக்கமோ அவ்வளவாகத் தோன்றியிருக்காது. எனவேதான் கம்பன் வரிசையாக அடுக்கி வந்து, இறுதியில் அவன் செயலை ஆணித்தரமாக அமைத்துச் செல்கிருன்.

எவற்றையெல்லாம் மறக்கக்கூடாதோ அவற்றையெல்லாம் மறந்தான்; எதனைமனத்திலும் நினைத்தல்கூடாதோ அதனை மறக் காது உடும்புப் பிடியாகப் பிடித்திருந்தான். இதனை மறந்திருந்

தால் ஏனையவற்றை யெல்லாம் மறந்திருக்க மாட்டான். எனவே மாண்டிருக்கவும் மாட்டான்; மாண்புடையனுகவும் இருந்திருப் பான். இந்த மறக்காத சிறுமைச் செயல், எச்செய்தியையும் மறக்கச்செய்தது; ஏனைப் பெருமைக்கெல்லாம் இழிவைத் தந்தது.

இன்னும், மறக்கலாகாத பலவற்றை மறந்தான்; மறக்க வேண்டிய ஒன்றை மறந்தானில்லை, இஃதென்னே என வியக்க வும், விதியின் விளையாடல் இருந்தவாறென்னே என எண்ணி இரங்கவும் செய்துள்ளார் இக்கவி வாயிலாகக் கம்பர். நெற்றிக் கண் கொண்டு எரித்திடும் சிவனது யோகத்தையே கலைத்து, அவனைப் போகத்தில் புகுத்தி விட்டான் மன்மதன் என்றால், சிவனடியானும் இராவணன் காம வயத்தனுகிக் கருத்திழப்பதற் குக் கூறுவானேன்? கடவுளையே அந்தப் பாடுபடுத்தும் காமன், மற்றவரைப் படுத்தும் பாட்டினைப் பற்றிப் பகரவும் வேண்டுமோ?

சீதையின் அழகைக் கேட்ட மாத்திரத்திலேயே காதலால் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி, ஊனுருகி உயிருருகி, உள்ளம் மருகி நிலைகுலைந்தான் இலங்கை வேந்தன்; காமவுணர்வால் கருத்திழந்து, அறிவிழந்து அலமந்தான் அரக்கர் கோன்.

இராவணனது சிந்தை முழுதும் சீதையே உந்தி நின்ருள்; காமத்தால் எனைத்தொன்றும் எண்ண முடியாதவனுகி, சீதையின் வண்ணமாகவே மாறிநின்றுன். காமத் தோற்றத்தால் அவன் அடைந்திட்ட மாற்றத்தையெல்லாம் காணுமாறு செய்துள்ளான் கம்பன் ஏற்றமிகு தன் எழிற் கவிதையாலே!

இங்ஙனம் உவகையும் வியப்பும் இரக்கமும் ஏக்கமும் கொள்ளுமாறு கவிதை யமைத்திட்டான் கம்பன். செய்ய வேண் டிய கடமைகளை யெல்லாம் உணர்த்தி, கடமை மறந்து அவன் காமம் புரிந்த கயமையையும் ஒப்பிட்டுக் காட்டுகின்றுர். மறந் தவை இவை. மறக்காதது இது என்றும்; முன்னவற்றை மறக் காதிருந்தால் மாட்சியுற்றிருக்கலாம் என்பதையும்; பின்னதை மறந்திருந்தால் மீட்சியுற்றிருக்கலாம் என்பதையும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள ஏற்றத்தாழ்வு போல் எடுத்துணர்த்தி இனிது அமைத்துள்ளான் பம்பு புகழக் கம்பன்.

இராவணனது முன்னை வாழ்வில் முகிழ்ந்த காமக் களிமயக்கைக் கம்பன் காட்டக் கண்டோம்; அவனது பின்னை வாழ்வில் வீர அழிவில் விளைந்த வேதனை மயக்கைக் கம்பநாடன் காட்டக் காண்போம்.

மாற்றான் வலியுணராது இராம இலக்குவர்களை மானிடப் பசுக்கள் எனக்கருதிப்போர் மேற்சென்றான் இலங்கை வேந்தன் இராவணன். வெல்லும் அத்தனை அல்லது தோற்றிலா அவ் விறலோன், சொல்லும் அத்தனை அளவையில் தோற்றான்; மணி முடி துறந்து நிலம் விரல் கீறிட நின்றான். உளம் நாணி உளைந்து நின்றவன் நாண நிலை நோக்கிய நெடுந்தகையாம் இராமன், 'இன்று போய் போர்க்கு நாளைவா' என்றனுப்பினான்; இவனும் இலங்கை நோக்கிச் செல்கின்றான்.

வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும், நாரத முனிவர்க்கேற்ப நயம்பட உரைத்த நாவும், தாரணி மவுலி பத்தும், சங்கரன் கொடுத்த வாளும் வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புகுந்தான். தொடர்ந்து போம், பழியினோடும், தூக்கிய கரங்களோடும் நடந்துபோய் நகர்ப் புகுந்த இயல்பைப் - பெருவேந்தன் அரண்மனை சென்றடைந்த அமைதியை எடுத்தியம்புகின்றான் கம்பன்; இங்கேதான் எதிர்மறை அமைக்கின்றான் ஏந்துபுகழ்க் கம்பன்.

இலங்கை நகருள் நுழைந்த இராவணன், எந்தத் திசையையும் ஏறெடுத்துப் பார்க்காது, நகர் வளத்தையும் காணாது, தன்னைக் காண ஆவலோடு ஓடிவரும் புதல்வரையும் கவனியாது, தன்னை வரவேற்கத் திரண்டுவரும் படைகளையும் பாராது மண்டோதரி போன்ற மனைவியரெல்லாம் தன்னை நோக்கத்தான் அவர்கள் ஒருவரையும் நோக்காது, தோல்வியுற்ற நாணத்தால் குனிந்த தலையோடும், குமைந்த உள்ளத்தோடும் தரையையே பார்த்தவாறு தன் அரண்மனையை அடைந்திட்டான்.

மாதிரம் எவையும் நோக்கான், வளநகர் நோக்கான், வந்த
காதலர் தம்மை நோக்கான், கடற்பெருஞ் சேனை நோக்கான்,
தாதவிழ் கூந்தல் மாதர் தனித்தனி நோக்கத் தான்அப்
பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்.

(யுத்த - கும்பகருணன் வதை – 3)

எப்பக்கமும் பார்த்து, நகர்வளமெல்லாம் கண்டு, பொரு களம் நோக்கிப் பீடுடன் சென்ற அப்பெருவேந்தன், இது போது எதனையும் நோக்காது வருகிறான்; வணங்கா முடியனாய்ச் செருமுகம் நோக்கிச் சென்ற அவ்வீரத் திருமகன் தாழ்ந்த தலையுடன் – தளர்ந்த நிலையுடன் வறிதே மீள்கிறான் எனும் போது இதயம் நோகின்றோம்.

படைகள் புடை சூழ்ந்துவரத் தேரேறி ஆரவாரத்திற் கிடையே எடுப்புடன் போர் மேற்சென்ற இராவணன் இது போது, துணையேதுமின்றித் தன்னந் தனியனாய் நடந்துவரும் நிலை காணும்போது நெஞ்சம் நெகிழ்கிறோம்; நெக்குருகுகிறோம்.

'போரிடை மீண் டொருவருக்கும் புறங்கொடாப் போர் வீரன், பொருது பின் வாங்குகிறான் எனும்போது மனம் நோகிறது.' எக்கோடியிலும் எவராலும் வெலப்படான் எனக் கொடுத்த வரமும் ஏனைத் திக்கோடும் முலகனைத்துஞ் செருக் கடந்த புயவலியும்' மிக்கப் பெருவேந்தன், 'இன்று படுதோல்வி யடைந்து, உளம் உடைந்து, உறுதி குலைந்து; உணர்வு கலங்கி, உணர்ச்சி குன்றித் தன்மனை நோக்கி–ஆனால் வழியில் எதையும் நோக்காது மண்ணகம் நோக்கி வருகின்றான் என் றறியும் போது ஏங்குகின்றோம். நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த நிலைகெட்ட மன்னனை நினைந்து விட்டால்! 'தோல்வி இன்னது என்று அறிகிலா விறலினன்'–யாண்டும் தோல்வியே கண்டறியாப் பெருமன்னன் இன்று தோற்று வருகிறான். அவ் அவலநிலையை என்னென்பது? விண்ணையே நோக்கி வீறுடன் ஏறுபோல் நடந்த இலங்கையர் கோன்–மண்மகள் முகம் கண்டி லாக் காவலன், இன்று மண்ணையே நோக்கி மனம் நொந்து மீள்கிறான் எனின் எவருள்ளந்தான் இரங்காது? ஏங்காது?

விண்ணை வென்று வரிசை பெற்றுயர்ந்த வீரன் இன்று மண்ணைப் பார்த்த வண்ணம் பீடின்றிப் பழியோடு திரும்பு கின்றான்–இதனை உன்னும் போது உள்ளம் உளைகின்றோம்.

வெட்கத்தாலும் துக்கத்தாலும் மனம் சஞ்சலம் அடைந் திருந்தமையான், சுற்றுமுற்றும் பாராது, கவிந்த தலையோடும்

குவிந்த நிலையோடும், நாணி நடந்து வருகின்றுன். எப்பக்கமும் பாராது, யாரையும் நோக்காது, எதனையும் எண்ணுது, நேர்ந்த பழியையே நினைந்து வருந்தி நடந்து வருகின்றுன். 'நங்கையர் நயனமெல்லாம் வாள் ஒத்தும், மைந்தர் வார்த்தை இராகவன் வாளி யொத்தும்' விளங்குதலால் நங்கையரையும் நோக்கான்; நற்புதல்வரையும் பாரான்.

தன் மனைவியரை மதியாது வெறுத்து, சீதையின் மீது விருப்புக் கொண்டு – மோகம் கொண்டமையாலேயே இத்துணை இன்னல் சூழ்ந்த தாகையால், தன்மனைவியரைக் காணவே இலங்கைக் காவலனுக்கு நாணம்; எனவேதான், தாதவிழ் கூந்தல் மாதர் தனித்தனியே தன்னை நோக்கத் தான் அவர்களை நோக்காது வந்தான் என்கிருர் கம்பர்.

சீதாதேவியை நோக்கிக் காதலித்துக் கயமை புரிந்தவன்; இதுபோது பூமாதேவியை நோக்கிய வண்ணம் வருகிருன் என நயம்பட உரைத்துள்ளார். 'நின்பால் தோன்றிய நங்கைக்கு (சீதைக்கு) ஊறு செய்தேன், அதனுல் உறுபழியும் ஒழியாத் துயரும் உற்றேன்' எனத் தன்னை பெற்ற தாயிடம் (நிலமாம் அன்னையிடம்) முறையிடுமாப் போல, முறை திறம்பி, நிறையழிந்து, நிலையின் இழிந்த நிலைகெட்ட இலங்கை நாயகன் வந்தான் எனக் குறிப்பிடும் கம்பன் கவிநயம் அறிந்து உணர்ந்து அகமகிழற்பாற்று.

எவற்றை எல்லாம் பார்த்து மகிழ வேண்டுமோ அவற்றையெல்லாம் பாராது, எதனை நோக்குதல் இழிவோ அதனை நோக்கினுன்; எவற்றை யெல்லாம் இது நாள்வரை கண்டு மகிழ்ந்தானே அவற்றை யெல்லாம் காணுது, எதனை இதுகாறும் நோக்காதிருந்தானே அதனை இன்று நோக்க வேண்டியதாயிற்று. இலங்கை வேந்தனுக்கே இந்நிலை யெனில், நாமெல்லாம் எந்தமூலை என்ற இரக்கமும் கலக்கமும் (Pity & Terror) நம்முள்ளத்தில் நிலைபெறச் செய்கிறது இக்கவி.

எல்லாவற்றையும் நோக்கியிருந்தால் மண்ணை நோக்கியிருக்க வேண்டியதில்லை; ஆனுல் மண்ணை நோக்கினுன் - மற்றெல்லாவற்றையும் நோக்காது போயினுன்.

நிலத்தைப் பார்த்த வண்ணம் தலைகவிழ்ந்து வந்தான் இராவணன் என்றுமட்டும் பாடியிருப்பனேல், இத்துணை நயமும் நலமும், அச்சமும் அவலமும், இரக்கமும் கலக்கமும் பிறந்திரா. இவ்விவற்றை யெல்லாம் நோக்காது வந்தவன் என அடுக்கிக் கொண்டே வந்து, முடிபு நிலையில் இதனை நோக்கினுன் எனும் போது, பொருள் நலமும் சொல்வளமும் மிகுந்து கவிநயம் கனிந்து நிற்கக் காண்கிறேம். எனவேதான் இங்கே வேறு பட்ட நிலைகளையும், மாறுபட்ட செயல்களையும் ஒருங்கு வைத்து ஏற்றத் தாழ்வை உணர்த்தி யுள்ளான் ஒண் தமிழ்க் கம்பன்.

கருத்து ஒன்றுதான்; அதனை வெளிப்படுத்தும் கவிதையும் எல்லாக் கவிஞர்க்கும் உரித்தான - பொதுவான ஒன்றுதான். எனினும் கருத்தை அழகாகவும் அருமையாகவும் உளங் கொள்ளும் வகையில் உணர்த்தும் திறம் உண்மைக் கவிஞர்க்கே- உயர் கவிஞர்க்கே வாய்ப்பதாகும்; மனநிலைக் கேற்பவும், சூழ் நிலைக்கு ஒப்பவும் இதனை இங்கே இவ்வாறு இயம்ப வேண்டும் என்ற பாங்கும் பெற்றியும் பெருங் கவிஞர்க்கே அமைவதாகும்.

அம்முறையில்தான் இவ்விரு இடங்களிலும் தம் கை வண்ணம் காட்டி, கவிநயம் ஊட்டுகின்றுன் கம்பன். தக்க இடத்தில் தகுந்த முறையில் தன் திறத்தினைக் காட்டி இரு கவி களையும் வைர மணிகளெனப் பதித்துள்ளான் - என்றும் ஒளிவீசி உளமகிழச் செய்யும் முறையில்!

ஆட்சியின் மாட்சிக் காலத்தில் ஒன்று; அவனது வீழ்ச்சிக் காலத்தில் ஒன்று.

ஆட்சியின் மாட்சி அழிந்தொழிவதற்குரிய தீச்செயல் புரி கின்றுன்; அச்செயல் நாடும் குடியும் நல்லாட்சியும் அழியச் செய்யும் வாயிலாய் அமைகிறது. *சீதையை மறக்காத செயல்* ஒன்றே இவன் *சீரழிவிற்குக் காரணமாகிறது.* இதனைக் காணும் போது-பெண்ணுசையால் பொன்றுகின்றதே இலங்கை வேந்த னின் பெருவாழ்வு எனும்போது கலங்குகிறேம்- கண்ணீர் மல்கு கின்றேம். அனைத்தையும் மறந்தது போன்றே *சீதையையும்* மறக்க மாட்டானு-அதன் மூலமாவது மீட்சியுறமாட்டானு எனத்

துடிதுடிக்கிறோம் - கண்ணீர் வடிக்கிறோம். விதி முண்டு வரும் போது அவன் மதியும் மருண்டு போகிறது! யார்தாம் என்செய் வது? என ஏங்கித் தவிக்கிறோம். இத்தகுந்த இடத்திலேதான் தன்திறமனைத்தையும் கொட்டித் தரமான கவிதையை அமைக் கிறான் கம்பன்.

சீதையை மறக்காத காரணத்தால் தரம் குறைந்தான்-நிலை குலைந்தான். காமம் அவனது வீரத்தையும் நலியச் செய்தது போலும்! தோற்றுத் திரும்புகிறான் தோல்வியே கண்டறியாக் காவலன்; யாராலும் வெலப்படாத வரம் பெற்ற வீரன் இன்று வெல்லப்பட்டு வறிதே மீள்கிறான். இவ்விழிவினை-அவலத்தைப் பெருக்கிக் காட்டுமாற்றான், இங்கே தன் கைவண்ணம் காட்டித் திறமான கவி யொன்று அமைக்கிறான் கம்பன். மண்மகள் முகம் கண்டறியா மானவீரன் இன்று மண்ணைக் காணுமாறா யிற்று, இவன் நிலை எண்ணும்போது இதயம் குமுறுகிறோம்; இவனது முன்னைப் பெருநிலை அறிந்த நமக்கு, இன்றைய இழி நிலை காணும்போது இதயமே வெடித்துவிடும்போல் இருக்கிறது. முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் மிக்க இவனுக்கே இந்நிலை வந்தெய்திற்று என்றால், நம்பாடு என்னு கும் என்ற அச்சமும் பெருந்துயரும் குடிகொள்கிறது நம் நெஞ் சத்தில். இவ் உருக்கமான இடத்தில்தான் ஏற்றமிகு கவிபுனை கின்றான் எழிற் கம்பனும்.

இராவணன் கதையையே இரண்டடிகளில் அடக்கி விட லாம்: காதலால் வீழ்ந்தான்; அவ்வீழ்ச்சியின்று மீட்சிபெற எண்ணி முயன்று வீரத்தால் அழிந்து பட்டான். எண்ணிப்பார்த் தால் காதலும் வீரமுமே ஒருவர் வாழ்வின் உயிரோட்டமாக இரு கண்களாக அமைகின்றன. இதனைக் கிரேக்கப் பெருங் கவிஞன் ஹோமரும் (Homer) தமது பெருங்காவியத்தில் குறிக் கிறார். கம்பனும் இராவணனது காதல் நிலையில் ஒரு கவியையும், வீர நிலையில் ஒரு கவியையும் நயம்படவும் திறம்படவும் அமைத் துள்ளான்.

ஒரு கருத்தை வலியுறுத்தப் பலபடவும் பலவாறாகவும் பல கவிகள் தீட்டுவதைக் காட்டிலும், மாறுபட்ட நிலைகளையும்,

வேறுபட்ட கருத்துக்களையும் ஒருங்கே கூறி உணர வைப்பது நன்று-நல்ல பயனையும் விளைக்கும், கருத்தும் உள்ளத்திற் பசுமரத்தாணிபோற் தெள்ளிதின் பதியும்; குறைந்த முயற்சியில் நிறைந்த பயனும் காணலாகும்.

வெயிலைப்பற்றிக் கூறும் போது நிழலையும், இருளைப்பற்றி இயம்பும் போழ்து ஒளியையும், வெம்மையைப்பற்றி விளம்புங் காலை தண்மையையும், உடன் வைத்துக் கூறுவது, தனியே வெயிலையும், இருளையும், வெம்மையையும் பன்முறை பலகவி களில் பலபடக் கூறுவதைக் காட்டிலும் மிக்க பயனை விளை விக்கும். ஒன்றன் இயல்பால் மற்றென்றின் இயல்பும் இழிவும்; ஏற்றமும் தோற்றமும் தெளிவாகும்.

இம்முறையில்தான் கம்பனும், முரண் அமைத்து, இரு வேறு நிலைகளையும், மாறுபட்ட கருத்துக்களையும் ஒரே கவியில் கூறி நயம் அமைக்கிறான்; பலவற்றை அடுக்கிக் கொண்டே வந்து, இறுதியில் கூறவந்த மாறான கருத்தைக் கூறுவதால் கருத்தாழமும், தெளிவும், சுவையும், நயமும் மிகுகின்றன. கம்பன் கவிநயம் அமைக்கும் முறையில் இதுவும் ஒன்றாகும்.

---

# தொல்காப்பியம்

வித்துவான். திரு. சி. அ. அனந்தராமன் அவர்கள்,
சின்னப்பம்பட்டி, (அஞ்சல்) சேலம் (மாவட்டம்).

(மலர் 10, இதழ் 9-ன் தொடர்ச்சி)

## I. தொல்காப்பியப் புதையல் :—

மாபெரும் தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியத்துள்ளே நன்கு நுணுகி ஆராய்வார் பல புதையல்களைக் காணலாம். யான் அறிந்தவரை ஈண்டுச் சிலவற்றைக் குறிப்பிட விரும்புகின்றேன்.

1. நூற்பாவின் சிறப்புக்கள் :- (அ) எழுத்ததிகாரத்தே எழுத்தின் பிறப்பு இலக்கணத்தை உணர்த்தும் "உந்தி முதலா முந்து வளித் தோன்றி" எனத் தொடங்கும் நூற்பா மொழி நூற்கு ஒத்த முறையில் அமைந்துள்ளது. இதில் ஒவ்வொரு எழுத்துகட்கும் பிறப்பு முறை கூறுவது வியக்கத் தக்கது. (ஆ) சொல்லதிகாரத்தில் "எப்பொருளாயினும் அல்லது இல் லெனின் அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல்" (35 சூ) என்னும் நூற்பாவும் "அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்" (36) என்னும் நூற்பாவும் அன்றாட வாழ்க்கையின் இலக்கணம் கூறுவதாக அமைந்துள்ளது. உரியியலில் "பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்" (392) "உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே" (393) என்னும் இரு நூற்பாக்களால் ஆசிரியன் மாண வனுக்கு உணர்த்தும் ஆற்றலையும் மாணவன் உணரும் ஆற் றலையும் அங்கையுள் நெல்லிக்கனிபோல் அறியலாம். உரிச் சொற்கள் அனைத்தும் நிகண்டுகள்; அகராதிகள் இன்றியே பொருள் உணரும் தன்மையை அக்காலத்து ஊட்டிக் கொண்டு இருந்தன என்பதை எளிதில் உணரலாம். "அவையில் கிளவி மறைத்தனர் கிளத்தல்" "மறைக்கும் காலை மரீஇயது ஒரால்"- இவ்விரண்டு சூத்திரங்களும் மனிதன் எவ்வெவ்

விடத்து எவ்வெவ்வாறு பேச வேண்டும் என்ற இலக்கணத்தைக் கூறுகின்றன. (இ) பொருளதிகாரத்தே கற்பியலில் "பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும் நீத்தகன்று உறையார் என்மனுர் புலவர் பரத்தையிற் பிரிந்த காலை யான" என்னும் இந்நூற்பா தனி மனிதனின் உடல் உறவு முறையை எடுத்துக் கூறுகின்றதெனின் வியப்பாமோ! களவியலில் "உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும், செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந்தன்று, எனத் தொல்லோர் கிளவி" எனத் தொடங்கும் இந்நூற்பா தமிழ் மக்களின் தனிப் பெரும் பண்பாட்டினை என்றென்றும் அழியா ஒவியமாக எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கிறது. இன்னும் எத்துணையோ சிறப்புக்கள். விரிப்பின் பெருகும்.

2. விடுபட்ட நூற்பாக்கள் :- (அ) ஆசிரியர் தொல்காப்பியனுர் எழுத்ததிகாரத்தே போலியைப் பற்றிக் கூறும் போது "அகரத்து இம்பர் யகரப் புள்ளியும் ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்று கூறி வகரம்ஒளஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் எனக் கூருது விடுத்தார். இவ்விடத்தில் "அகரத்து இம்பர் வகரப்புள்ளியும் ஒளவென் நெடுஞ்சினை மெய் பெறத் தோன்றும்" என்ரே "அகரத்து இம்பர் யவகரப் புள்ளியும் ஐஒளவென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்ரே நூற்பாக்கள் யாத்து இருக்க வேண்டும். பாடபேதம் இருப்பதாகவும் கூறுவர் அறிஞர். (ஆ) பொருளதிகாரத்தே தலைமகன் நற்ருய், கண்டோர் ஆகியோருக்குக் கூற்றுக்கள் கூறினுர். ஆனல் தலைமகளுக்கு கூற்றுக் கூருது விடுத்தார். காரணம் யாமறியோம். இளம்பூரணர் "பாங்கர் முதலாயினுரை இச்சூத்திரத்தால் கூறுப; தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல் வேண்டும். இவரோடு ஒரு நிகரன்மையின் எனின், ஒக்கும். தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையால் பெயர்த்து எழுதுவார் விழ எழுதினுர் போலும்" எனத் தமது உரையின் கண் கூறிச் செல்கின்ருர். இதில் இச்சூத்திரம் என்பது "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே" என்பதாகும்.

3. சூத்திரச் சிதைவு:- (அ) "சகரக் கிளவியும் அவற்ரோ ரற்றே அஐஒள எனும் மூன்றலங் கடையே" என்னும் இந் நூற்பாவுக்கு முன் "கதநபம எனும் ஆவைந்தெழுத்தும் எல்லா

உயிரொடும் செல்லுமார் முதலே'' எனக்கூறிய ஆசிரியர் பின் சகரக்கிளவியைப் பற்றிக் கூறுகிறார். ஆனால் சகரம் மொழிக்கு முன்னர் சங்கம், சட்டி, சங்கு, சரி, சட்டை என்னும் சொற்களில் வருகின்றது. ஆகவே இச்சூத்திரம் சிதைந்து இருக்க வேண்டும். அஃதாவது ''சகரக்கிளவியும் அவற்றோரற்றே அவை ஒள எனும் ஒன்றலங் கடையே'' என்ற பாடவேறுபாடு காணப்படுவதால் இவ்வாறே இருத்தல் வேண்டும். காலம் சென்ற துடிசைக்கிழார் திரு. சிதம்பரனார் இவ்விரு நூற்பாக்கள் ஒன்றாகவே இருத்தல் வேண்டுமென்றும் இப்பாடவேறுபாடு பொருத்தம் என்றும் கூறுவர். இதனை திரு. நா. தேவநேயப் பாவாணர் அவர்கள், தமது எழுத்ததிகாரக் குறிப்புரையில்(கழக வெளியீடு) மிக அழகாகத் தெளிவுபடக் கூறி இருக்கின்றார். அதனைக் கண்ணுற்றுத் தெளிவுறுங்கள்.

4. **வழக்கு இறந்தன :-** (அ) ''குற்றியலுகரமும் அற்றென மொழிப'' எனவும் ''எகர ஒகரத்து இயற்கையும் அற்றே'' எனவும்வரும்நூற்பாக்கள்அவை மெய்யிறுபோலப் புள்ளிபெற்று நிற்கும் என்பதை உணர்த்துவன. இஃது இக்கால வழக்கில் வீழ்ச்சி அடைந்தது. (ஆ) ''உட்பெறுபுள்ளி உருவாகும்மே'' என்னும் நூற்பா மகரக் குறுக்கத்தின் வேறுபாட்டைக் கூறுவதாகும். அஃதாவது மகரக்குறுக்கம் 'ப்' என்ற வடிவிலோ 'ம்' என்ற வடிவிலோ அக்காலத்து வழங்கியது போலும். புள்ளி என்பதை புள்ளி (.) என வைத்துக் கொள்ளாமல் கோடு( I ) எனக் கொண்டால் தற்போதுள்ள முறைக்குச் சரியாகிவிடும். [ப் ம ம்] வித்தியாசம் காண்க- (இ) அழன், புழன், குயின், சுட்டு முதலாகிய இகர இறுதியாகிய அதோளி, இதோளி, உதோளி என்னும் சொற்களும், ஊ, தாமரை, வெள்ளம் ஆம்பல் முதலான எண்ணுப் பெயர்களும், இக்காலத்து வழக்கு இறந்தன. இதனை விரிவாக திரு. ராகவ அய்யங்காரின் பொருளதிகார ஆராய்ச்சி என்னும் நூலில் காண்க.

5. **பிறன் கோட் கூறல் :-** எழுத்துக்களின் புறனடையைக் கூறும் ''எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து'' எனத் தொடங்கும் நூற்பாவும், ''வேற்றுமைதாமே ஏழென மொழிப'' என்ற சூத்திரமும் பிறன் கோட் கூறலாக அமைந்துள்ளன.

6. **மாட்டேற்றுச் சூத்திரங்கள் :-** தொல்காப்பியர் பல இடங்களில் சூத்திரம் சுருங்குவதற்காக "மாட்டெறிதல்" என்னும் உத்தியைக் கைக்கொண்டு நூற்பாக்கள் யாத்துள்ளார். உதாரணமாக ஒன்றினைக் காண்போம். "பனியென வருஉம் கால வேற்றுமைக்கு அத்தும் இன்னும் சாரியை ஆகும்". இதேபோன்று வருவன எல்லாவற்றையும் ஆங்காங்கே "வளியென வருஉம் பூதக் கிளவியும் அவ்வியல் நிலையல் செவ்விது என்ப", "மழையென் கிளவி வளியியல் நிலையும்", "வெயிலென் கிளவி மழையியல் நிலையும்", இருளென் கிளவி வெயிலியல் நிலையும்" என மாட்டெறிந்து சூத்திரங்களை யாத்திருப்பது நுணுகி அறிவோர்க்கு எளிதிற் புலனும்.

7. **தொல்காப்பியர் வழுவின இடங்கள்:-** (அ) "மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த னகரத்தொடர்மொழி ஒன்பஃதென்ப" என்று வரையறுத்துள்ளார். ஆனல் வலியன், வயான் கயான், அலவன் போன்ற சொற்கள் மயங்காமல் இருப்பதால் இதனை வழுவென்றே கூறலாம், (ஆ) வல்லினத்தைப் பற்றிக் கூறும் போது வல்லின மெய்கள் உச்சரிக்கும் போது வன்மையாகவும் மென்மையாகவும் ஒலிக்கின்றன. உதாரணமாக அகம்-பக்கம் என்பன. இதனைப் பற்றி நூற்பாச் செய்யவில்லை. ஆகவே தொல்காப்பியர் செய்த வழு என்று கூறலாம். ஆனல் சில அறிஞர்கள் இதுபற்றி அக்காலத்திய மக்கள் வல்லின எழுத்தையும் மென்மையாகவே உச்சரித்திருப்பர் என்று கூறுவர். அவர்கள் கூற்று ஆராயற்பால தொன்ருகும். (இ) "வகரக் கிளவி நான்மொழி ஈற்றது" இந்நூற்பாவின் பொருள் அவ், இவ், உவ், தெவ் என்ற நான்கும் என்பர் உரையாசிரியர். எவ் என்ற சொல் ஈற்றில் வருகிறது. இது பற்றி ஏனே கூருது விடுத்தார். (ஈ) எண்ணுப் பெயர்களின் புணர்ச்சியைப் பற்றிக் கூறும்போது தொண்ணூறு, தொள்ளாயிரம் ஆகியவற்றிற்குப் புணர்ச்சி விதி கூறுவது பெரு வியப்பையே அளிக்கிறது. ஒன்பது+பத்து, ஒன்பது+நூறு என்று கொண்டு அவதிப்படுவதைவிட "தொண்டு" என்ற சொல்லைக் கையாண்டால் மிக எளிதாகும். இச் சொல்லைத் தொல்காப்பியர் செய்யுளியலில் "தொண்டு தலையிட்ட பத்துக்குறை எழுநூற்று ஒன்பஃதென்ப"

எனக் கூறுவதால் அச்சொல்லையே எண்ணுப் புணர்ச்சிக்கும் கையாண்டு இருக்கலாம். நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவர் கூறும் ஒன்பது என்ற எண்ணுப் புணர்ச்சி ஓரளவுக்குப் பொருத்தமாகவே உள்ளது. இது போன்று ஆசிரியர் தொல் காப்பியனுர் சிலவிடங்களில் வழுவியுள்ளார் என்று கூறல் மிகையாகாது. இதனைக் கண்ணுறும் அறிஞர்கள் ஆராய்ந்து தக்க காரணத்தை எடுத்துரைப்பாராக.

8. **ஒரே சொல்லுக்கு இருவேறு இலக்கணம் :–** "புளி மரக் கிளவிக்கு அம்மே சாரியை," ஏனைப் புளிப்பெயர் மெல் லெழுத்து மிகுமே"—என்பனவாகும். இவற்றில் முதலில் மரத் தினையும் இரண்டாவது சுவையினையும் உணர்த்துவதாகும். இஃதேபோல் சே, எகின், இல், விண், எண், இல்லம், ஆண் ஆகிய சொற்கட்கும் தனித்தனியே இருநூற்பாக்கள் யாத்திருப் பது ஆசிரியரின் நூற்பாச் சிறப்புக்குச் சான்ருகும்.

9. **தொகை வகைச் சூத்திரங்கள் :–** ஒன்றனைப் பற்றிக் கூறும்போது முதலில் தொகை கொடுத்து பின்னர் வகைப் படுத்திக் கூறுவது இவரது இயல்பு. (அ) காட்டாக "பாங்கன் நிமித்தம் பன்னிரண்டென்ப" என்னும் நூற்பாவுக்குப் பின் "முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே" எனவும் "பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே" எனவும் "முதலொடு புணர்ந்த யாழோர் மேன தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே" எனவும் வகைப்படுத்தி பாங்கன் நிமித்தம் பன்னிரண்டையும் கூறு வதைக் காண்க. (ஆ) அடுத்து" உவமப்போலி ஐந்தென மொழிப" என்ற நூற்பாவிற்குப் பின் "தவலருஞ் சிறப்பின் அத்தன்மை நாட்டின் வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும் பிறப்பினும் வருஉம் திறத்த வென்ப" என வகுத்து உரைத்தார். இதனை உரையாசிரியர் தமது உரையில் வேறு விதமாகச் கூறிச் செல்வர்.

10. **பண்டைய வழக்கு :–** ஆண்பாலை 'ஆடூஉ' என்றும் பெண்பாலை 'மகடூஉ' என்றும் அழைப்பதும், மகடூஉ மருங்கின் பால்தெரி கிளவியாகிய பெண்மகன் என்பதனை 'பெண்மகன்

(தொடர்ச்சி 638-ம் பக்கம் பார்க்க)

உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு



**[புதிய மலிவுப் பதிப்பு — 1961]**

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் கிரயம் ரூ. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரூ. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

644 பக்கங்கள் கொண்டது. உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

**ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள்** B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(மூன்றும் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்
"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்
சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"
வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்
இயற்றியது.



கங்கை முடித்த சிவபெருமான் கருணை பிடித்த வருட் பெருக்காற் கடல்சூ ழுலகிற் புண்ணியங்கள் கருதிப் புரியுந் திருவினரைத், தங்கி யிருந்து பேரறங்க டகவி லுஞற்றும் வகை நிறுவித் தகுமவ் வறங்க ளாற்பயனைச் சார்வார் தமையு நிலை நிறுத்திப், பொங்கு மின்ப மன்பருக்குப் பொருந்த வைப்பா னங் ஙனமே புனிதக் காசித் திருமடத்துப் பொற்பார் தலைவ ரருணந் தித், துங்கத் திருப்பே ரருளாளர் தூய வறங்கள் பலபுரியத் துலங்கும் பலரவ் வறப்பயனைச் சுகிக்க விந்நா ளருளினனே 1

காசி மடத்துப் பெருந்தலைவர் கண்ட வறங்கள் தமைமுன்பு கவிதை யமைத்தோ ரிருநூற்றைக் கருது மொன்பா னென வுரைத்தேன், மாசி லறங்கள் பின்புசெய்த வகையை யிங்கே வழுத்து கின்றேன் வாக்கின் மன்னர் பூந்துருத்தி மடத்துப் பணிக்கு நூறுநா, றிசர் நாகர் கோவிலினி லிலங்கு மிந்துக் கல் லூரி எழிலார் குமர குருபரனு ரினிய வழிபாட் டரங்குக்குப், பேசு மையா ருயிரஞ்சீர் பிறங்குங் காசித் திருத்தலத்தில் பேணு ஞான சம்பந்தப் பெரிய குரவ ரருள்நினைவாய் 2

அன்னம் பாலிப் புச்செய்ய வைந்தோ டைந்தா மாயிரமெம் அப்பர் திருப்பூந் துருத்தியினி லவர்நூல் நிலைய நன்கொடை

யாய், மன்னு மாரு யிரத்தோடு வாய்ந்த வைந்நூ றுயர்காசி வளவர் பாவை நினைவன்னம் வழங்க வேழா யிரம்ரிஷிகேஸ், தன்னி லன்னம் பாலிப்புச் சார்ந்த வேழா யிரமாகும் தஞ்சை யரசர் சரபோசி தனிக்கல்லூரி நன்கொடைதான், சொன்ன வையா யிரம்திரைலோக் சுந்த ரத்திற் சிவநிசியின் துங்க நிதியா யிரங்கழுகுத் துணைசேர் குன்றப் பள்ளியிலே 3

பயின்மா ணவிகள் யாத்திரையின் பரிசாய் உ. வே. சாநினை வில் பன்னுமூவா யிரமதுரைப் பதியில் மூர்த்தி யார்விழவுக், குயர்வா நிதியி ராயிரத்தோ டுற்ற வைந்நூ றுயர்காஞ்சி உண் மைப் பதியிற் குருபரனு ருணவுப் பாலிப் புக்குதவி, இயலா ரேழா யிரம்பொதியத் திலங்கும் பாவ நாசத்தி லினிய தமிழ்மா முனி வர்பெய ரிசையுந் திருத்தே வாரநிதி, உயலா ரையைந் தாயிரம் பே றுதவுங் கூடற் றேவார உம்பர் நிதியை யைந்ததுவா யுறுமா யிரத்தோ டைந்நூறே 4

காசிச் சேது காவலர்பேர் கானு மன்னம் பாலிப்புக் கவினுர் நிதியை யாயிரமுக் கண்ணுன் கேதாரத்தலத்தில், தேசக் குமர குருபானுர் திருப்பே ரன்னம் பாலிப்புச் செய்ய வேழா யிரஞ் சேதுத் தேவைத் தலத்தி லுமாபதியார், நேச வன்னம் பாலிப்பு நிகழ்த்த வாரு யிரத்துடனே நீடு மைந்நூ றருவிவள நிறையுந் திருக்குற் றுலத்திற், பேசுந் திருத்தே வாரநிதி பெரிய விருபத் தாறென்னப் பிறங்கு மாயி ரத்துடனே பின்னு மைந்நூ ருகு மன்றே 5

(தொடரும்)

---

(முன் 635-ம் பக்கத் தொடர்ச்சி)

வந்தான்' எனக் கூறுவதும், பொருளில் காணும் நடுகல் நடுதல், வெறியாடல், விரிச்சி ஒர்தல் ஆகியனவும், பண்டைய வழக்கு களாகக் காணப்படுவன. இப்பொழுதும் சிலவிடங்களில் கிராம மக்கள் இடையே அருகி வழங்குவதைக் காணலாம். இவ்வாறு தொல்காப்பியத்துள்ளே பல புதை பொருள்களைக் காணலாம். அவற்றையெல்லாம் ஆராய்ந்து அறிவது தமிழ்ப் பெருமக்களின் கடமையாகும்.

[தொடரும்]

# திருமந்திரம் தரும் தெள்ளமுதம்

வெண்பாவூர், திரு. பொ. திருஞானம் அவர்கள்.



பரவைசூழ் இப்பாரிடையே எத்துணையோ நாடுகள் உள. அத்துணை நாடுகளிலும் பல மொழிகளுள. நாம் வதியும் இப் பாரத நாடும் பலமொழிகளைத் தன்னகத்தே கொண்டதுதான்; என்றாலும் தமிழ் மொழிபோல் சிறப்பான, இணையற்ற மொழி வேறெதுவும் இல்லையென அறுதியிட்டுக் கூறலாம்.

தமிழ்மொழி தன்னேரில்லாதது; பிறமொழிச் சொற்களின் துணையின்றித் தனித்தியங்கும் தன்மைத்து, திருந்திய மொழி, உயர்தனிச் செம்மொழி என்றெல்லாம் பாராட்டப்பட்டது. இதற்குச் சான்று பண்டைய இலக்கியங்களே. மேனாட்டறிஞர் தம் கூற்றும் இதுவே. இதற்குச் சான்று அவர் எழுதிய நூல் களே யாகும்.

இத்துணைச் சிறப்புமிக்க நந்தமிழ் மொழியில் காப்பிய நூல்களும், உரைநடை நூல்களும் பல இருப்பதைத் தெள்ளிதின் உணரலாம். அந்நூல் பலவும் சீர்கெட்ட வாழ்வைச் சீர்திருத்தி வைக்கும்; சீர்பெற்ற வாழ்வை இன்னும் சிறப்புறச் செய்யும்; சீர்பெற விழையும் வாழ்வைச் சீர்பெற உயர்த்தும். இந்த நோக்கத்தில் எழுந்த நூல்கள் பல என்றாலும் உலகிலுள்ள பல நிலைகளையும் விளக்கி, வகைப்படுத்தி இனிதியம்பிச் செல் கின்றன. இவ்வாறு செல்லும் நூல்களுள் ஒன்றாகிய "திரு மந்திரம்" என்ற நூலினை மட்டும் ஈண்டு எடுத்தியம்புவாம்.

"திருமந்திரம்" என்றவுடனே அந்நூல் முழுவதையும், ஆசிரியர் வரலாறு முழுமையும் ஈண்டு எடுத்துக் கூற முற்பட

வில்லை. நூலினைப் பற்றியும் ஆசிரியரைப் பற்றியும் சிறிதறிந் தால் சாலும் என்பது என் எண்ணம்; ஏனெனில் முழுமையும் கூறுவ தென்றால் பத்திரிகை ஆசிரியர் அவர்கள் சம்மதம் வேண்டும்.

அவர் உளப்பாங்கு அறியாமையால் நூலுள் உள்ள சில கருத்துக்களை மட்டும் அறிவாம். எதற்காக இவையெல்லாம் எடுத்தியம்புகின்றேனென்றால் நல்ல நூல்கள் எல்லாம் இருக்க எட்டணா, நான்கணாப் புத்தகங்களின் அட்டைப் படத்தைப் பார்த்து, மயங்கி, அறிவை அழிவுப் பாதையில் செலுத்துகின்றார் களே! நன்னெறியில் ஒழுகக் கூடாதா? என்று கூறுவதில் தவறெதுவும் இருக்கமுடியாது. நல்ல நூல்கள் இருக்கத் தீய நூல்களை நாடுவது "கனியிருப்பக் காய்கவர்ந்தற்று" அல்லவா?

திருமந்திரம் என்பது எழில்மிக்க மந்திரமொழிகளைத் தன்னகத்தே கொண்டது. "நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப" என்ற தொல் காப்பியச் சூத்திரத்தான் 'மந்திரம்' என்பதன் இலக்கணத்தினை உய்த்துணரலாம். இஃது உலகுய்யும் பொருட்டு இயற்றப் பெற்றது. சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் நான்கு நிலைகளை விரித்துக் கூறுவது; சைவத் திருமுறைகளுள் பத்தாம் திருமுறை யாகும். இந்நூலுக்குத் திருமந்திரமாலை எனவும், தமிழ் மூவாயிரம் எனவும் பெயர்கள் உண்டு.

இந்நூலினை இயற்றிய ஆசிரியர் திருமூலராவர். இவர் ஒரு யோகி. மூவாயிரம் ஆண்டுகள் யோகம் செய்தவர். ஆண் டொன்றுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் ஆண்டுகட்கு மூவாயிரம் பாடல்களை யாத்தவர். இதிலிருந்தே இந்நூலின் பெருமையினை நாம் நன்கறியலாம். இவர் வாழ்ந்த காலத்தை அறுதியிட்டுக் கூற இயலாது; என்றாலும் சிலர் கி. பி. பத்தாம் நூற்றாண்டு கட்கு முற்பட்டவரென்பர்.

யாவருக்கும் தெரிந்த எளிமையான கருத்துக்கள்தாம் என்றாலும், நம் வாழ்வில் அவை இடம்பெறவில்லை. இடம்பெற வேண்டும். தமிழ்ப் பெருங்குடி மக்கட்குரிய ஒரு பெருஞ் சிறப்பு

யாதெனில் உணவிடுந் தன்மையும் உண்ணும் முறையுமேயாம். அற்றை ஞான்று கூறியது இற்றை ஞான்றிற்கும் பொருந்து வதாகும். அவர் நமக்கு அறிவுறுத்தும் கருத்துச் சுடர்மணி களைக் கவனியுங்கள்! வாழ்வில் கடைப் பிடியுங்கள்!

பசி யென்று எவர்வரினும், அவர் தமது இல்லாமையை வாய்திறந்து கூறுவதற்கு முன்பாகவே மிக்க மகிழ்வோடு உணவிடுமின். வாய்திறந்து கூறுவதனால் யாது பயன் ? இல்லை. நாம்தான் அதையறிந்து யாது பயனடையப் போகின்றோம். ஒன்றுமில்லை! அவர்தான் தன் சக்தியை வாய்திறந்து கூறு வதன்மூலம் இழக்கின்றார். எனவேதான் பேசாமல் உணவிடுமின் என்றார் திருமூலர். உனவிடும்போது வந்தவர் உயர்ந்தோரா, தாழ்ந்தோரா, உறவினரா, பகைவரா, இளையவரா என்றெல்லாம் வேறுபாடிகளின்றியும் நாடு, மொழி, சமயம் என்ற வேறுபாடு களின்றியும் உணவிட வேண்டும். வருகின்ற விருந்தினரை எதிர்நோக்கிக் காத்திருந்து விருந்தருந்தச் செய்து பிறகுதான் தான் உண்ண வேண்டும். [1]வள்ளுவர் தம் குறளதனை ஒப்பு நோக்குக.

பக்குவமான நல்ல உணவை உண்ணுக. பழம், காய் பக்குவமாக இருக்கும்போதே உண்ணுக; உடல் நலமாக இருக்கும். அவை அழுகி, வாடி, உலர்ந்து உண்பதால் உடலுக்குக் கேடுவிளையும்; சிலர் உண்கிறார்கள்; உண்ணக் கூடாதென்று இனிதியம்புகின்றார், உணவின்மையாலோ, வேறு காரணத்தாலோ சிலர் சில பொழுது கழிந்து உணவு உண்ணு கின்றனர். அப்படி உண்ணுவதால் பசி அதிகம் ஏற்படுகிறது; அதிகப் பசியால் மிகுந்த ஆவலுடன் வாயில் உணவைக் கொள்ளும் வரை வைத்து உண்கின்றார்கள். அப்படியும் உண்ணக்கூடாது. ஆறஅமர இருந்து உண்ண வேண்டும். பழமொழிகூட ஒன்றுண்டு.[2] நன்முயற்சியால் பெற்றபொருளைக் காக்கை எவ்வாறுதான் கொண்டுவந்த பொருளைத் தான்மட்டும் உண்ணாது தன்னினத்தையும் அழைத்து எவ்வாறு உடன்

---

1. "செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

2. "நூறுங்கத் தின்றார்க்கு அகவை (வயது) நூறென்ப"

உண்ணுகிறதோ அதுபோல் நாமும் சேகரித்த பொருளை நண்பர், உறவினர் முதலியவர்களோடு கூடிப் பங்கிட்டுண்ணுதல் வேண்டும்.

"காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்' : [1]

ஆர்க்கு மிடுமி னவரிவ ரென்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையிர் விரைந்தொல்லை யுண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் காலம் அறிமினே.

அடுத்து, அறஞ்செய்வானது திறத்தினை அறிவாம். சிவ பெருமானுக்குப் பச்சிலை ஒன்றினை இட்டு வழிபடுதல் செல்வர்க்கும் இயலும்; வறியவர்க்கும் இயலும். ஆகையாற்றான் யாவர்க்கும் இயலும் என்று குறிப்பிட்டார். அறங்கள் முப்பத்திரண்டாகும். அவற்றில் ஒன்று பசுவிற்கு வாயுறை கொடுத்தல். இவ்வறத்தினை யாவரும் மேற்கொள்ளலாம். இயலாத தன்று பசுவின் வாய் கொள்ளுகின்ற அளவைத்தான் வாயுறை என்று சொல்லுவது. ஈண்டு அது புல்லைக் குறிக்கும். பசுவிற்கு வாயுறையாகிய புல் கொடுத்தல் யாவர்க்கு மியலும். உணவு உண்ணும் சமயம் அல்லாதபோது நம்மிடம் உணவில்லாமல் இருக்கும். ஆனால் உணவு உண்ணுகின்ற சமயத்தில் எல்லோரிடமும் உணவிருக்கும். செல்வரானாலும், வறியரானாலும் உண்ணும்போது ஒருவருக்கு உணவிட இயலும். இதனை இயலாதென்று சொல்வதற்கில்லை. "ஐயமிட்டுண்" "இவ்வளவேனும் இட்டு உண்மின்"[2]

உளமொத்து இனியவுரை கூறுவதே அறமாகும். இனிய சொற்கள் பல சொல்லுவதனால் அல்லவை தேயஅறம் பெருகும் இதனைக்கூற யாவரும், "எங்களால் முடியாது" என்று சொல்வதற்கில்லை; யாவராலும் எளிதில் முடியும்.

யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை

---

1. தாயுமானவ சுவாமிகள்.
2. ஔவையார் தம் அமுத வாக்கு.

யாவர்க்கு மாமுண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.

இக்கட்டுரையின் முதற்பாடல் கொடைச் சிறப்பாகும். அடுத்துள்ள இரண்டாம் பாடல் அறஞ்செய்வான் திறம் பற்றிய தாகும். இதுகாறும் இக்கட்டுரையினின்று திருமுலர் உணவிடும் முறைபற்றியும், உண்ணும் முறைபற்றியும் (கொடைச் சிறப்பு), அறஞ்செய்தலென்பது செல்வராலும், வறியராலும் இயலும் (அறஞ்செய்வான் திறம்)என்பது பற்றியும் ஈண்டினிதறிந்தனம்.

திருமந்திரம் என்னும் நூலைச் சில பதிப்பகங்கள் வெளி யிட்டன. ஆனால், குறைந்த விலைக்கு வெளியிடவில்லை: மிகுதி யான விலை! ஆயினும் மக்கள் வாங்காமலில்லை; வாங்கிக் கொண்டுதான் இருக்கிறார்கள்; என்றாலும் வாங்குவோர் தொகை மிகக் குறைவே!

தமிழ் நாட்டிலுள்ளவர்கள் அத்தனைபேரும் செல்வர்களல் லர். சிலர் செல்வர்; சிலர் நடுத்தர நிலையினர்; சிலர் எளியர். இந்த மூன்று நிலையினரும் வாங்கத் தகுந்த விலையில் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் கலைக்கோவில் குழுவினர், "திருமந்திரம்" என்னும் சைவத்திருமறையை வெளியிட்டுள்ளார்கள். நல்ல தமிழ்ப்பணி. இவர்களின் தமிழ்ப்பணி பலருக்கு நன்கு தெரியும்; சிலருக்குத் தெரியாது. அவர்களும் ஆர்வமுடன் இதனையறிந்து இந்நூலினை வாங்கியும், வாங்குவித்தும் சைவத்தைப் பேணு வார்களாக!

இம்மாதிரிக் கட்டுரைகளால் யாதுபயன் என்று கேட்பீரா யின், இதுபோன்ற சிலநூல்களையும், அந்நூல்களின் ஆசிரி யர்களைப் பற்றியும் அந்நூலுள் உள்ள சில கருத்துக்களையும் அறிந்துகொள்ளலாம். அதோடுமட்டுமின்றி, "இவ்வளவு நல்ல கருத்துக்கள் உள்ளனவா; இதை உடனே நாம் படித்துப் பார்க்க வேண்டும்." என்ற ஊக்கமும் உணர்வும் எழும். எழுப்புவதே இக்கட்டுரையின் முழுநோக்கமாகும்.

(வளரும்)

1137-ம் ஞ, ஆவணி, புரட்டாசி மாதங்களில்
கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 8965 | திருமுருகாற்றுப்படை | சென்னைமாகாணத்தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி. |
| 8966 to 71 | திருமந்திரக்கட்டுரை (இரண்டாம் தந்திரம்) | திருவாவடுதுறை ஆதீன வெளியீடு. |
| 8972 to 76 | துறைசைப்புராணம் (வசனம்) | ஷை |
| 8977 to 80 | ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் | ஷை |
| 8981 to 85 | ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் மாலை (குறிப்புரையுடன்) | ஷை |
| 8986 | தமிழ்ப் புலவர் வரிசை (8ம் பகுதி) | கழகவெளியீடு. |
| 8987 | பழமுதிர்சோலை | கி. பழனியப்பன், விவேகானந்தா அச்சகம், மதுரை |
| 8988 | Wandering in the Himalayas | Swami Taporanji Maharaj. |
| 8989 & 90 | திருவானைக்கா அகிலாண்டநாயகி மாலை | டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல்நிலையம், அடையாறு, சென்னை-20. |
| 8991 & 92 | கமலாலயச்சிறப்பு என்னும் திருவாரூர்ப் புராணம் | ஷை |
| 8993 | Kasyappa Silpa Sastram | T. M. S. S. M. Library, Tanjore. |
| 8994 | Saiva Siddhanta | V. A. Devasenapathy, University of Madras. |

| | | |
|---|---|---|
| 8995 & 96 | தருமை கனகாபிஷேக விழாமலர் 1661 | கனகாபிஷேக விழாக் குழுவினர், ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம். |
| 8997 to 9001 | திருமந்திர மாநாட்டு மலர் | திருவாவடுதுறை ஆதீனம். |
| 9002 | Techno-Economic Survey of Madras | Government of Madras. |
| 9003 to 11 | ஸ்ரீ குமரகுரு அந்தாதி | உடுமலைக்குறிஞ்சி,சுவாமி குமரானந்த சரஸ்வதி |
| 9012 to 17 | மகாத்மாகாந்தி நூல்கள் (7) | காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், சென்னை-2. |
| 9018 | மாயூரம் தலவரலாற்றுச் சுருக்கம் | திருவாவடுதுறை ஆதீனம், ஸ்ரீ மாயூரநாத சுவாமி தேவஸ்தானம் |
| 9019 | காட்சியும் கருத்தும் | ஷை |
| 9020 & 21 | சிவதத்துவ விவேகம் (குறிப்புரையுடன்) | திருவாவடுதுறை ஆதீனவெளியீடு. |
| 9022 | சேக்கிழார் சுவாமிகள் வரலாறு (துதிப்பாடல்களுடன்) | இயற்றியவர் சித்தாந்தவித்தகர் கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார், சென்னை. |
| 9023 | Saint Alavandar or The King's Quest of God (An inspiring play of three Acts) | By Sivananda, Published by The Sivananda Literature Research Institute, Sivananda Nagar, Rishikesh. |
| 9024 | சைவசித்தாந்தக் கல்லூரி அமைப்பு (சிலசிந்தனைகள்) | ராவ்சாகிப். நல். முருகேச முதலியார் பி. ஏ., |
| 9025 | வடதிருமுல்லை வாயில் பாகோபார்ம் வைஷ்ணவி துதிப்பா மஞ்சரி | ஆசிரியர் வி. மு. சுப்பிரமணிய அய்யர், M. A., தலைமைத் தமிழாசிரியர் கிறிஸ்தவக் கல்லூரி உயர்நிலைப்பள்ளி, சென்னை. |
| 9026 | ஆலயவழிபாடு | தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையம். |

| | | |
|---|---|---|
| 9027 | சென்னை மாகாணத்தமிழ் சங்கம் வெள்ளி விழா 1960 வரலாறு 1934 — 1959 | 1934ல் பதிவு செய்யப்பெற்றது, திருநெல்வேலி. |
| 9028 & 29 | ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர் நிலைப் பள்ளி ஆண்டு மலர் 1960 — 61 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்தரப்பாடசாலை, ஆடுதுறை. |
| 9030 | நாட்குறிப்பு (படங்களுடன்) 1959 | India. |
| 9031 | The Divine Life. Vol. XXIII April 1961 No. 4 | |
| 9032 | Sivananda, The Messenger of peace | The Sivananda Literature Festival commemoration volume. Sri. Swami Krishnananda. |
| 9033 | திருப்புலியூர் வெண்பா (மூலமும் உரையும்) | குமரகுருபரர் சங்கம், ஸ்ரீவைகுண்டம். |
| 9034 & 35 | அமரகாதலர் | தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான், எஸ். ஆர். எஸ். பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி. |
| 9036 & 37 | வேங்கடம் முதல் குமரிவரை | ஷை |
| 9038 & 39 | ஷை (பொன்னியின் மடியிலே) | ஷை |
| 9040 & 41 | ஸ்ரீ சகலகலாவல்லித் தாயார், "ஸ்ரீ அம்புஜம்மாள் நினைவுமலர்" 20-ஆம் ஆண்டு | திருஞானசம்பந்தர் அருளிய கோளறு பதிகம் (அனுபந்தம்) |
| 9042 | பரமகுரு (சிவஞானபோதம். சூத்திரம்-8) | S. T. இரத்தினம் |
| 9043 to 49 | மகான் ஸ்ரீ குமரகுரு அந்தாதி (குமரகுருபரர் நினைவு குமுதமலர்) | உடுமலைக்குறிஞ்சி சுவாமி குமரானந்தசரஸ்வதி. |

(தொடரும்)

உ

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

## ‘ திருமுறை வெளியீடுகள் ’



| எண் | நூல் | | ரூ. ந பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. | ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) .. | ... | 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் .. (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை .. | ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் .. | ... | 2 75 |
| 20 | .. யுத்த தேவகாண்டம் .. | ... | 2 00 |
| 21 | .. தக்ஷகாண்டம் .. | ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் .. | ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் .. | ... | 1 00 |
| | டி 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும | ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No R. No. 1485/57.
Regd No. M. 5574 குமரகுருபரன்.

| எண் | நூல் | விலை |
|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) - (அச்சில்) | ... |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... 0 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், "[illegible] விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '61.